23

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்

கோயிற்கலம்பகம் என்கிற
திருவரங்கக் கலம்பகம்



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

திவ்வியகவி. பிள்ளைப்பெருமாளையங்கார்

அருளிச்செய்த

# திருவரங்கக் கலம்பகம் மூலமும் பழைய உரையும்.



இவை

கோயில். நம்பெருமாள் சுவாமிகளால்

பிழைபடாப் பரிசோதிக்கப்பட்டு,

சென்னைப்புரசை

நாராயணசாமிப்பிள்ளை & பிரதர் அவர்களது

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

விலை] 1929. [அணா-8.

37, சரவணப்பெருமாள் முதலிவீதி,

புரசை, சென்னை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

அழகியமணவாளதாஸர்

என்கிற

திவ்வியகவி. பிள்ளைப்பெருமாளையங்கார்

அருளிச்செய்த

# கோயிற்கலம்பகம்

என்கிற

# திருவரங்கக்கலம்பகம்

## மூலமும்

## பழைய உரையும்.*






இவை

கோயில். நம்பெருமாள் சுவாமிகளால்

பிழையறப் பரிசோதிக்கப்பட்டு,

சென்னைப்புரசை

**நாராயணசாமிப்பிள்ளை**

அண்டு பிரதர் அவர்களது

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

விலை] 1929. [அணா-8.

37, சரவணப்பெருமாள்முதலித்வீதி, புரசை, சென்னை.

* இவ்வுரையாசிரியர் பெயர் தெரியவில்லை.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

அழகியமணவாளதாஸர்

என்கிற

திவ்வியகவி

# பிள்ளைப்பெருமாளையங்கார் சரித்திரம்.

கருவிலே திருவுடையராய்த் தேறு நான்மறை வேதி யர் குலதிலகராய் அவதரித்துப் பிள்ளைப்பெருமாள் என் னுந் திருநாமங்கொண்டு வேதவேதாந்தங்களில் நிபுண ரானதுமன்றிப் பகவத் ஸ்வரூப ரூபகுண விபூதிகளி லும், ஆழ்வார்கள் அருளிச்செயல்களிலும், நாதயாமுந யதிவராதிகளாகிற ஆசாரியர்கள் அருளின ரஹஸ்யார்த் தங்களிலும் வல்லவருமாய்ப் போருகிற இவர்,

"வாழ்விப்பானெண்ணமோவல்வினையிலின்னமென்னை
ஆழ்விப்பானெண்ணமோவஃதறியேன்-தாழ்வில்லாப்
பாடலழகார்புதுவைப்பட்டர்பிரான்கொண்டாடும்
கூடலழகாநின்குறிப்பு."

என்று அத்தியவசித்துத் திருமலைநாயகர் மதுரையில் அரசாட்சிசெய்கிற காலத்தில் அவரது ராஜாங்கசேவை களில் ஒரு ராயசமென்னும் உத்தியோகம் பெற்றுத் தமக் குசிதமான வருணாசிரம தருமங்களில் வழுவாது கால க்ஷேபராய்க் "குழலிசை யளிமேவு கூரம்வந்தருள் குரு பர னிருபாத போதடைந்த" திடசித்தராகையாலே,

"துளவு துளவவென்ச்சொல்லுஞ்சொற்போச்சே
அளவிநெடுமூச்சுமாச்சே-முளரிக்
கரங்கால்குளிர்த்ததேகண்ணும்பஞ்சாச்சே
இரங்காயரங்காவினி."

என்று திருநாட்டுக் கெழுந்தருளினுரென்பது பிரசித்தம். இன்னுமிவரது வைபவங்களெல்லாந் தெரிந்தோராலே கேட்டுணர்க.

[இச்சரித்திரம் திரிசிரபுரம் வித்வான் கோவிந்த பிள்ளை அவர்களால் எழுதப்பட்டது.]



ஸ்ரீ

ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்.

# திருவரங்கக் கலம்பகம்

## மூலமும் உரையும்.

—⊱✻⊰—

### தனியன்கள்.

நேரிசை வெண்பா.

ஆழ்வார்முன்பின்னவர்க்குமாமறைதந்தார்தமிழால்
வாழ்வார்மணவாளர்மாண்பவருட்-டாழ்வாரும்
எம்போலியர்க்குமிரங்கியரங்கக்கலம்ப
கம்போதநல்கவைத்தார்காண்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சொன்னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந் துறையி னோக்கோ, டென்னோக்குங் காண விலக் கியமாவ தன்றியிதி லீடு பட்டோர், நன்னோக்கும் புத்தியும்பத் தியும்பெறுவர் முத்தியுண்டா நானென்சொல்கேன், பன்னோக்க மணவாளர் பகாரங்கக் கலம்பகத் தைப் பாரீர் பாரீர்.

### காப்பு.

கட்டளைக்கலித்துறைகள்.

மறைப்பாற்கடலைத்திருநாவின்மந்தரத்தாற்கடைந்து
துறைப்பாற்படுத்தித்தமிழாயிரத்தின்சுவையமிர்தங்
கறைப்பாம்பணைப்பள்ளியானன்பரீட்டங்களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச்சன்மவிடாய்க்குநிழலில்லையே.

என்றவிக்கவிமுதல் நான்குகவியுந் துதிகவியாக முற் கூறப்பட்டன: அவை வருமாறன்றியுந், திருவரங்கேச ருடைய சரித்திரங்களையுந் திருவழகின் அவயவங்களையு மெடுத்துக்கொண்டு "வைக்கும் புயந்தம்வண் டம்மானைப் பாண்மதங்கு, கைக்கிளை சிற்றூசல் களிமடக்கு - மிக்க மறங், காலத் தழையிரங்கல் சம்பிரதங் கார் தூது, கோலுங் கலம்பகத்தின் கூறு." என்னு மிக்கலம்பகம் பாட்டியலில் வித்துவசிரோமணியாய் விப்பிரவிலோத்துங்கராய் திரு

வவதாரஞ் செய்தருளிய அழகியமணவாள தாசனுனவர்
தொகுத்துச்சொல்லுஞ் சூத்திரமிதுவாதலானும் முனி
புங்கவராகிய அகஸ்தியராற்சொல்லப்பட்ட அருந்தமிழ்
மொழி வழக்கமாதலானுங் கற்குமவர்கருத்திற்கும் நாவிற்
குஞ் சொற்சுவை பொருட்சுவை தோன்றச் செய்தமை
யானும், இம்மை மறுமையென்னு மிருமைக்குத் துணை
யாய் நன்னெறியாக்கு மென்பதனுனும், உரையெழுத
வேண்டி விரும்பினமையால் சிற்றறிவுடையேனுதலால்
என்னறிவினில் அறையுமிலக்கியங்களுட் சிறிதுமறிந்
தவன் நானன்றே. ஆயினும், நன்மையால் பயனறிந்
திடேற வேண்டுமென்னுமாசை எனக்கு மென்சொல்வழி
கேளாது வாதிக்கத் தொடங்குதலால், "நீரளவே யாகு
மாம் நீராம்பற் றுன்கற்ற, நூலளவே யாகுமாம் நுண்
ணறிவு." என்பதுவும், "தொட்டனைத் தூறு மணற்கேணி
மாந்தர்க்குக், கற்றனைத் தூறு மறிவு." என்பதுவும்போல
யானறிந்தவளவின் உரையெழுதினேனுதலால் இவ்வா
றெழுதிய உரைகொண்டுந், திருவரங்கேசருடைய சிறப்
பினைச்சொல்லும் வேறுமுள்ள நூல்களைக்கொண்டும்,
முழுதுணர்ந்த அந்தணர்முதலிய மூதறிவோர்சொல்
லும் உபதேச முறைமையைக்கொண்டும் இதின் பொரு
ளினது விரிவெல்லாமறிந்துகொள்க.

இதன்பொருள்.

இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வ
ணவேத மென்று சொல்லாநின்ற நான்குவேதமாகிய
திருப்பாற்கடலை தம்முடைய அழகிய நாவாகிய மந்தர
கிரியென்னு மத்தினுலே கடைந்து இயலிசை நாடக
மென்னு முத்துறை முதலாகிய துறையினிடத்திற்சேர்
த்திய தென்கலையின் முதன்மைபெற்ற ஆயிரப்பிரபந்த
மான வதிகரசமிகுந்த அமிர்தத்தை கரியவிடத்தைக்
கண்டத்திலுடைய கட்செவியாகிய வணையிற்பள்ளிகொ
ண்டருளிய ஸ்ரீரங்கநாயகருடைய திருவடிக்கன்பாளர்
கூட்டமுழுது மனங்களிகூர்ந்து பானம்பண்ணப் பரிபூர
ணமாக நிறைக்கப்பட்ட நம்மாழ்வாருடைய திவ்விய
ஸ்ரீபாதபற்பநிழல் அல்லது பிறக்கிறது மிறக்கிறதுமா
கிய நமதிருவினைவெப்ப வேதனையால்வந்த விடாயானது
தீருதற்குப்பொருந்த வேறு நிழல்காணேன். என்றவாறு.

வேதந் தொகுத்துத் தமிழ்ப்பாடல் செய்த விமலன் பொய்கை, பூதன் மயிலையர் கோன்புகழ்ச் சேரன்புத் தூரன்றெண்டர், பாதந்தருந் துகண் மாமழிசைக்குமன் பாணன் மங்கை, நாதன் மதுர கவிகோதை பாதங்க ணான்னுதுமே.

இ-ள். முன்கூறப்பட்ட நான்கு வேதசாரத்தையுந் தொகுத்துத் தமிழ்மொழிப் பாடலாகச் சாற்றியருளிய நிருமலனாகிய சடகோபாழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார் என்னுமிவர்கள் பாதமலரைப் பரமென்றடைந்துவாழ்வாம். எ-று.

பிடிக்கும்பரசமயக்குலவேழம்பிளிறவெகுண்
டிடிக்குங்குரற்சிங்கவேறனையானெழுபாருமுய்யப்
படிக்கும்புகழெம்மிராமானுசமுனிபல்குணமும்
வடிக்குங்கருத்தினர்க்கேதிருமாமணிமண்டபமே.

இ-ள். தங்கள் தங்கள் சமயமே சமயமென்னு மதானுசாரமாகவேறில்லையென்று பிடிவாதமாகப் பிடித்துப் பேசப்பட்டதை யாயிகம், வைசேடிகம், உலகாயுதம், மயகசம், அருகம், அத்தமுதலாகிய பரசமயமாகிய யானைக் கூட்டங்களை வீறிட்டலற இடிமுழக்கம்போலக் கெற்சிக்கிற கண்டத்தொனியையுடைய ஒரு ஆண்சிங்கம்போலப் பராக்கிரமமுடையவர் பூலோகம் புவலோகம் சுவலோகம் மகாலோகம் சனலோகம் தவலோகம் சத்தியலோகமான மேலேழு லோகமும், அதல விதல சுதல நிதல நிராதல தாராதல மகாதலமான கீழேழுலோகமுஞ் சொல்லித் துதிக்கும் புகழினையுடையவராகிய வெம்பிராமானுச முனிவருடைய பலபல குணாதிசயங்களையும் நாவினுக் கிரசமுற வடித்துச்சொல்லுங் கருத்தினையுடையபேர்களுக்கும் அன்றி மற்றபேர்களுக்குக் கிடைக்குமோ வைகுந்தத்திற் றிருமாமணிமண்டபமாகிய முத்திமண்டபம். எ-று.

வானிட்டகீர்த்திவளர்கூரத்தாழ்வான்மகிழவத்த
தேனிட்டதார்நம்பெருமாள்குமாரர்சிவனையபன்

தானிட்டசாபத்துடைத்தாளரங்கர்சங்காழிபுய
நானிட்டனென்றருள்பட்டர்பொற்றாட்கதிநந்தமக்கே.

இ-ள். வானுலகமனாவிய கீர்த்தியானது வளரா நின்ற கூரத்தாழ்வாருடைய திருவுளமகிழ்ச்சியடையத் தக்கதாகிய மகவாய்வந்தவர். அதுவுமன்றியும், வண்டு கள்படியப்பட்ட மணமாலைதரித்தருளிய வரங்கநாயகரருளால் உதயஞ்செய்கையால் நம்பெருமாள் குமாரரென்றும் ஒருபேர் சொல்லப்பட்டவர். சிவனுனவர் பிரமதேவனுடைய சிரசைச் சிதைத்தமையால் பிரமதேவனிட்ட சாபத்தைத் தீர்த்தவராகிய திருவரங்கேசருடைய அடையாள முத்திரையாகிய சங்கு சக்கரத்தையெனதிரண்டு புயத்திலுந் தரித்து நானிட்டநாக மூந்நின்றிரங்கி யிரட்சித்தருளிய பராசபட்டர் வியாசபட்டர் என்பவர்களுடைய பொற்பாதமே நமக்குக் கெதியென்று போற்றல் செய்வாம். ஏ-று.

## நூல்.

மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

இவை எட்டடித் தரவுகள். 2.

சீர்பூத்தசெழுங்கமலத்திருத்தவிசின்வீற்றிருக்கு
நீர்பூத்ததிருமகளுநிலமகளுமடிவருடச்
சிறைப்பறவைபுறங்காப்பச்சேனையர்கோன்பணிகேட்ப
நறைப்படலைத்துழாய்மார்பினுபிறுபோன்மணிவிளங்க
வரியதானவர்க்கடிநந்தவைம்படையும்புடைதயங்கக்
கரியமால்வரைமுளரிக்காடீன்றுகிடந்தாங்குப்
பாயிரநான்மறைபரவப்பாற்கடலுட்பருமணிச்சூட்
டாயிரவாய்ப்பாம்பணைமேலறிதுயிலினிதமர்ந்தோய்.

மண்ணகந்துயர்நீங்கவானகந்தொழுதேத்தக்
கண்ணகன்சோணாட்டுக்காவிரிவாய்ப்புளினத்துப்
பம்புகதிர்விசும்பிரவிபசும்புரவிவழிவிலங்கு
செம்பொன்மதிலேழுடுத்ததிருவரங்கப்பெருங்கோயில்
ஆணிப்பொற்றகடுரிஞ்சுமணிக்கதவ நீள்வாயின்
மாணிக்கவெயில்பரப்பும்வயிரமணிவிமானத்துண்
மின்னிலங்குதொடிவலயவியன்வலக்கைகீழ்கொடுத்துத்
தென்னிலங்கைத்திசைநோக்கித்திருநயனந்துயில்வோய்
[கேள்.

இ-ள்: சீர்மையுஞ் செழுமையும் விளங்கிய செவ்விய தாமரையாகிய அழகியவாசனத்தில் வீற்றிருக்கத்தக்க குணமுண்டான ஸ்ரீதேவியும் பூமாதேவியும் திருவடித்தாமரைகளைத் தங்கள் கைகளினால் வருடும்படியாகவுஞ் சிறகினையுடைய பறவைவேந்தாகிய கருடன் கடைப்புறக்காத்திருக்கவும் சேனைமுதலியானவர் ஏவற்றொழில் கேட்டுநிற்கவுந் தேன்பொருந்திய துளவமாலையணிந்தருளிய திருமார்பிலே இளஞாயிறுதித்ததுபோல கிரணங்களையுமிழ்ந்து கவுஸ்துவாபரண மணியானது விளங்கவும் யாவராலும் வெல்லுதற்கரிய அசுராதியரைக்கடிந்துவென்ற சங்கு சக்கரந் தண்டு வாள் கோதண்டமாகிய பஞ்சாயுதங்க ளிருபக்கமும்நின்று விளங்கவுங் கருமைபெற்ற ஒருபெரிய மலையானது கமலவனமாகப் பூத்துக்கிடந்ததுபோல அடிதுடங்கிப் பாயிரமாக நான்குவேதமும் மும்முறை முறையாகப் பரவிப்போற்றிசெய்யத் திருப்பாற்கடலிலே பெருமைமிக்க மாணிக்கமணிகளைப் பணாமுடியிடத்துண்டாகிய ஆயிரம்நாவையுமுடைய வராவணையின்மேலே யோகநித்திரையி லினிதாகவமர்ந்தவனே! அப்படியமர்ந்ததுமன்றி மண்ணுலகத்திலுள்ள துன்பமெல்லா மகலவும் விண்ணுலகமுழுதுந் தொழுது தோத்திரஞ்சொல்லவும், இடம்விசாலமாயகண்ட காவேரித் தீர்த்தத்திலே வெண்மணற் குன்றினிடத்திலே நெருங்கிய கிரணங்களையுடைய ஆகாயத்திலே வரப்பட்ட சூரியன்றேரிற்கட்டிய பச்சைக்குதிரைகள் உயர்ச்சியினாலே வழிவிலகிப்பக்கத்தே போகாநின்றசெம்பொன்னினாற்செய்த சத்தப்பிராகாரஞ்சூழ்ந்த திருவரங்கமாகிய பெருமைமிக்க கோயிலினிடத்திலே ஆணிப்பொற்றகட்டினால் மேய்ந்து நவமணிகளிழைத்த கபாடனும் நீண்ட திருவாயற்படிக்குள்ளாய்! மாணிக்கமணிகளின் சோதியாகிய வெயிலெறிக்கும் வச்சிரமணியாலமைத்த பிரணவாகாரமான விமானத்தின்மேல் மின்னற்கொடிபோலொளிவிளங்கிய கொடிமுதலாகிய வாகுவலயமணிந்த அழகின்மிக்க வலது திருக்கையைத் திருமுடிக்கீழே கொடுங்கை யணையாகக்கொடுத்து தெற்கின்கணுண்டாகிய இலங்கைத்திசையை நோக்கித் திருக்கண் வளர்ந்தருளிய சுவாமி! அடியேன்சொல்லும் விண்ணப்பங் கேட்டருள்வாயாக. எ-று.

இவை ஈரடித்தாழிசைகள். 6.

தேவராய்த்தேவர்க்குந்தெரியாதவொளியுருவாய்
மூவராய்மூவர்க்குண்முதல்வனாய் நின்றோய் நீ.

போற்றுவார்போற்றுவதுன்புகழ்ப்பொருளேயாதலினால்
வேற்றுவாசகமடியேன்விளம்புமாறறியேனால். [கும்
பணித்தடங்காதிமையவற்கும் பங்கயத்தோன்முதலோர்க்
பணித்தடங்காப்புகழடியேன்பணித்தடங்கற்பாலதோ.
யாங்கடவுளென்றிருக்குமெவ்வுலகிற்கடவுளர்க்கும்
ஆங்கடவுணீயென்றாலஃதுனக்குவியப்பாமோ. [துநீ
அனைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்ப
நினைத்தவிளையாட்டென்றானின்பெருமைக்களவாமோ.
கருதரியவுயிர்க்குயிராய்க்கரந்தெங்கும்பரந்துறையு
மொருதனிநாயகமென்றாலுன்புகழ்க்குவரம்பாமோ.

இ-ள். தேவர்களாய்த்தோன்றி அப்படியேதோன்றிய தேவர்களுக்குங் காணப்படாதசோதி வடிவமாயிருந்தருளிய பிர்மாவிஷ்ணு ருத்திரனென்று மும்மூர்த்திவடிவமாய்த் தோன்றி அப்படிதோன்றிய மூவற்குமுதல்வனாகிய மூலகாரணனாய் நின்றவனும் நீயே, உன்னைத் தோத்திரஞ் செய்யப்பட்டவர்கள் தோத்திரஞ் செய்வதுன்னுடைய புகழ்சேர்ந்த பொருளன்றி மற்றொன்றில்லாமையால் வேறொருவசனமா யடியேனெடுத்துச் சொல்ல வழியறிந்திலேன், பெருமைபெற்றசெவியிலே குண்டலமாகப் பாம்பையணிந்த ஈசுரனுக்கும் நாபிக்கமலத்திற் பிறந்த பிர்மாமுதலானபேர்களுக்குஞ் சொல்லி முடியாத உன்கீர்த்தியை அடியேனாற்சொல்லி முடிக்கப்படுமோ! யாங்களே தெய்வமென்று இறுமாந்திருக்குமெந்தெந்த வுலகத்திலுள்ள தெய்வங்களுக்குந் தெய்வமாகிய கடவுள் நீயேயென்று சொல்லுவேனாகில் அது கொண்டுதான் உன்பெருமைக்கு அளவுசொல்லக்கூடுமோ நினைவினால் நினைத்து நிதானித்தற்கரிய சகலசீவராசிகளுக்குஞ் சருவேந்திரியாமியாய் ஒளித்துச் சூக்குமவடிவா யெங்கெங்கும் நிறைந்திருக்கும் ஒப்பதுமிக்கதுமில்லாத வொருதனிநாயகமென்று சொல்லிப் புகழ்வேனாகிலு முனதுபுகழாகிய பெருங்கடலுக்கு அதுவொரு அணையாகுமோ. எ-று.

இவை ஈரடி அராகங்கள். 4.

உருவெனவருவெனவுளனெனவிலனென
அருமறையிறுதியுமறிவருநிலைமையை.
இவரிவரிறையவரெனமனவுறுதியோ
டவரவர்தொழவறுசமயமுமருளினை.
கடுவளிகனல்புனல்ககனமோடகலிடம்
உடுபதிகதிரவனுருவமுமருளினை.
கடிமலரடியிணைகருதினர்பெறுகென
வடிநடுமுடிவறவருளபரகதியினை.

இ-ள். உருவமென்றும் அருவமென்றும் உள்ளவனென்றும் இல்லவனென்றும் ஒன்றோடொன்றெவ்வாமற் றடுமாறிச் சொல்வதேயல்லாமல் இதிலொன்றை மெய்யென்று திடப்படுத்தி வேதமுடிவிலேயு மறியப்படாத நிலைமையை யுடையவனுமானாய், அதுவுமன்றி, யாங்கள்வழிபடுங்கடவுளர் இவர்காணிவர்காணென்று திடப்படுத்தி வேதமுடிவிலேயும் அறிபட்படாத நிலைமையை யுடையவனுமானாய், அதுவுமன்றி, சித்தத்துடனே அவரவர் தொழும்படிக்கீடாய் அறுசமயபேதங்களையும் உண்டாக்கினவனுமானாய், அதுவுமன்றி, நெடிதாகிய காற்று நெருப்பு தண்ணீர் ஆகாயம் பூமி சந்திரன் சூரியனென்றுஞ் சொல்லத்தக்க வடிவங்களை வகுத்தவனுமானாய், அதுவுமன்றிப் பரிமளமலரையொத்த உனது இரண்டு திருவடியையுஞ் சிந்தித்தவர் பெறக்கடவதென்று ஆதிமத்தியாந்தமென்பதில்லாமையாக அளிக்கப்பட்ட வதிரகசியமான பரகதியைப்பொருந்தினவனுமாகயிருந்தாயாகில் உன்னை யாவராலறிந்து துதிக்கப்படும். எ-று.

இவைபெயர்த்தும் ஈரடித்தாழிசைகள். 4.

ஒருநாலுமுகத்தவனோடுலகீன்றாயென்பரதுன்
திருநாபிமலர்ந்ததல்லாற்றிருவுளத்திலுணராயால்.
மேருகிரியுடலவுணன்மிடல்கெடுத்தாயென்பரதுன்
கூருகிரேயரிந்ததல்லாற்கோவேநீயறியாயால்.
பன்றியாய்ப்படியெடுத்தபாழியாயென்பரது [ன்.
வென்றியாருனதெயிற்றின் மென்றுகள்போன்றிருந்ததா
அண்டமெலாமுண்டையென்பாரறியாதாராங்கவைநீ
உண்டருளுங்காலத்திலொருதுற்றுக்காற்றாவால்.

இ-ள். ஒப்பற்ற சதுமுகனுகிய பிரம்மதேவனையும் உலகங்களையும் நீபெற்ருயென்று சொல்லுவார்கள் அப்படிசொல்லப்படுவது உனது அழகிய நாபிக்கமலமே பெற்றதன்றி யுனது திருவுளத்திலே நீயறியாயே! மகமேரு கிரியையொத்த திரேகத்தையுடைய விரணியாசூரனுடைய பராக்கிரமத்தை அடக்கினுயென்று சொல்லுவார்கள் அப்படி சொல்லப்படுவது உனது கூரியநகமேயரிந்ததன்றி சுவாமி நீயறியாயே! சுவேதவராகவவதாரமாய் பூமியைச்சுமந்து வலிமையை யுடையவனென்று சொல்லுவார்கள் அப்படி சொல்லப்படுவது வெற்றியையுடைய உனது கொம்பிலே யொட்டிநின்று வொரு சிறிய மணற்பொடியைப்போ லிருந்ததன்றி மற்ருெரு பாரவாசியாகக்காணப்பெற்றதல்லவே! அண்டங்களெல்லாம் நீயுண்டுவிட்டதென்று சொல்லுவார்கள் அந்த அண்டங்களையெல்லாம் நீ யுண்ணத் துடங்குமளவில் அதுவுனக்கு வொருகவளத்துக்குங் காணுமோ காணமாட்டாது. எ-று.

இவை நாற்சீர் ஓரடி அம்போதரங்கம். 2.

நஞ்சமுமமுதமுநரகும்வீடுமாய்
வஞ்சமுஞானமுமறப்புமாயினே.

இருவினைப்பகுதியுமின்பதுன்பமுங்
கருணையும்வெருளியுங்கருத்துமாயினே.

இ-ள். கொல்விக்க நஞ்சமும் பிழைப்பிக்க வமுதமும் வேதனைப்படுத்த நரகமும் பரமானந்தத்தையுடைய மோக்ஷமுமாயினதன்றி, வஞ்சிக்க வஞ்சமும் அறிவிக்க அறிவும் பிறப்பிக்க பிறப்புமாயினுய் அதுவுமன்றி, இருவினைப்பகுதியாகிய பிறப்பிறப்பும் புண்ணியபாவமுஞ் சுகதுக்கமுமாய் அவனவன் எது முன்னிலையா யிரங்க விரக்கமுங் கோபிக்கக்கோபமுங் குறிக்கக்குறிப்புமாருய் ஆகையாற் சகலமும் உன்னைவிட்டகன்றதில்லை அதை விட்டு நீயகன்றதுமில்லை. எ-று.

இவை முச்சீர் ஓரடி அம்போதரங்கம். 4

அலைகடல்வயிறுகலக்கினே
யவுணரைமதுகையடக்கினே

மலைகட களிறுவதைத்தனை
மலை தலைகவிழவெடுத்தனை.

இவை இருசீர் ஓரடி அம்போதரங்கம் 8.

மண்ணை விண்டனை உண்ணிறைந்தனை
வெண்ணெயுண்டனை பெண்ணிறந்தனை
மருதிடந்தனை ஒருமையாயினை
பெருதடர்ந்தனை பெருமைமேயினை.

இ-ள். அலைகளையுடைத் தாய் யாவராலுங்கலங்காத
சமுத்திரத்தினுடைய வயிறுகலங்க வசையற்ற மகமேரு
வாற் கலக்கவுங் கலக்கினாய், அதுவுமன்றிச் சுரர்களுக்
கிடுக்கண்செய்கையால் அசுராதியர்களுடைய ஆண்மை
யை யடக்கவுமடக்கினாய், அதுவுமன்றிக் காதகனாகிய
கஞ்சனால்வந்து மலைக்கப்பட்ட குவலையாபீடமென்னு
மதயானையி னுயிர்மாண்டுவிழ வதைக்கவும் வதைத்தாய்,
அதுவுமன்றி, இந்திரனாற்பெய்யப்பட்ட மழையைத்தடு
த்துப் பசுக்குலங்களையும் ஆயர்கூட்டங்களையுங் காக்க
வேண்டி கோவர்த்தனகிரியின் கொடுமுடியாகியது தலை
கீழாய் மேலே யதன்விரிவு குடையாயிருக்க எடுக்கவுமெ
டுத்தாய், அதுவுமன்றியும் பன்றியாக வடிவமெடுத்து
முகக்கொம்பினாலேகுத்தி மண்டலமுழுதும் பிளக்கவும்
பிளந்தாய், அதுவுமன்றி ஆயர்பாடியில் அன்னையாகிய
அசோதை தயிர்கடையும்போது தான் மனையிற்காயும்
பால் பொங்கிற்றென்று தீயுண்ணு முலையை வலிதிற்
பறித்து வோடுகையில் மத்தினாற்பாண்டத்தையுடைத்து
வெண்ணையையணைத்து எடுத்துண்ணவுமுண்டாய், அப்
படியுண்டதுவுமன்றிப் பின்னும் காலினாற்றயிர்ப்பானை
யை யெல்லாந்தகர்த்துருட்டிக் கண்டாலடிக்கப் போரு
ளென்று பயந்து மற்றொருத்திவீட்டிற்புகுந்து வொளி
த்து அங்குமுண்டான உறிபெட்டாமையால் உரல்வைத்
தேறிக் கல்லினாற் குழிசையையுடைத்து வெண்ணெய்
நெய்யெடுத்துண்டு கூடவந்த தோழர்களுக்குங்கொடுத்து
பூனைக்கும் வழங்குமளவில் வேதமுந்தேடிக்காணாத சிறிய
திருவடிச் சுவட்டின்வழியே வந்து கண்டு வாய்மடித்து
நெக்கித் தாம்பினா லுரலோடே பிணித்து மத்தினாலடிக்
கவருகையில் அவ்விடத்தில் முற்காலத்திலே நாரதர் சா
பத்தால் நளகூபரன் மணிக்கிரீவனென்னுங் குபேரன்

பிள்ளைகளிரண்டும் மருதமரமாய் நிற்கிற சாபந்தீர இர ண்டுக்கும் நடுவே தவழ்ந்து அந்த மருதமரத்தை முறிக் கவு முறித்தாய், அதுவுமன்றிக் கவுசலதேசாதிபனை நக்கினசித்தென்பவன் பெற்ற சத்தியையென்னும்பெண் ணை விவாகஞ்செய்யும்பொருட்டா யார்க்குமடங்காததாய் நின்ற பேழெருதுக்கு மேழாய்த் திருவுருக்கொண்டுசெ ன்று அவ்வேழெருதின் சவுரியவலிமையையடக்கித் தள் ளவுந் தள்ளினாய், அதுவுமன்றியெள்ளுக்குளெண்ணெ ய்போ லெங்கும் நிறையவும் நிறைந்தாய், அதுவுமன்றி யிவ்வளவென் றோரிலக்கத்துக் கெட்டாமல் நிற்கவும் நின்றாய், அதுவுமன்றி யொன்றாகவுமானாய்ப் பலவாக வுமானாய் ஆகையாலுனது திருவிளையாட்டின்செயலை யாவெனச்சொல்லுவேன். எ-று.

எனவாங்கு. தனிச்சொல்.

இது ப்திநான்கடி நிலமண்டில ஆசிரியச்சுரிதகம்.

மலர்தலையுலகத்துப்புலமைசான்ற
பதின்மரும்பணித்தபாடலோதையொடு
முதுமறைகரங்கமுரசமார்ப்ப
வலம்புரிபிளிறும்பொலம்புரிகோயில்
ஆழியஞ்செல்வவாதியம்பரம
வாழிவாழிமாயோய்வாழி
நெடியோய்வாழிநின்மாட்டொன்றே
அடியேன்வேண்டுவதஃது நீமறுக்கேல்
பூவருமயன்முதல்யாவருமறியா
மூவுலகளந்தநின்சேவடிவாழ்த்தித்
தொழுதகைத்தொண்டர்தந்தொண்டருட்சேர்க்கா
தெழுவகைத்தோற்றத்தின்னுப்பிறப்பின்
என்பொழியாக்கையுட்சேர்ப்பினுமவர்பால்
அன்பொழியாமையருண்மதியெனக்கே.

இ-ள். விரிவாகிய விடமுள்ள பூலோகத்திலே புல மைமிகுந்த பதின்மராகிய ஆழ்வாராதியர் சொல்லியரு ளிய நாலாயிரப் பிரபந்தமாகிய பாட்டினது வோசையுட னேகூடப் பழமையாகிய சதுர்வேதங்களும் சத்திக்க வும், வெற்றிமுரச முழங்கவும், வலம்புரிச்சங்கந் தொனி க்கவும், பொன்னாற்சமைத்தருளிய திருவரங்கமாகிய கோ யிலினிடத்தில் அழகிய சங்காழியைத் தரித்தசெல்வனே,

ஆதிமூலமாயழகியபரமனே! நீவாழ்வாயாக, நீண்டுவள
ர நின்றவனே, நீவாழ்வாயாக! உனதிடத்தில் அடி
யேன் விண்ணப்பஞ் செய்யவேண்டுவ தொன்றுண்டு.
அதனையில்லையென்று மறுத்துவிடாம லீதல்வேண்டும்.
அஃதியாதெனிற் றாமரைப்பூவிலுற்பவித்த பிரமதேவன்
முதற்கொண்டு யாவரொருவராலு மளவுகாணப்படாத
பூமியந்தர சுவர்க்கமென்னு மூவுலகையுமளந்த உனது
திருவடித்தாமரையை வாழ்த்திவணங்குகின்ற தகைமைப்
பாட்டினையுடைய தொண்டர்க்குத் தொண்டரானவர்க
ளுக்குள்ளே அடியேனையு மொருவனுகச் சேர்க்கவேண்
டியது. அடியேன் பக்குவனல்லாமையால் அப்படிசேர்
க்கத் திருவுளத்துக்குப் பாங்கின்றிச் சேர்த்திடாமல் நா
ன்குவகைப்பட்ட அண்டசம் சுவேதசம் உற்பீசம் சரா
யுசமென்னும் பிறப்பிலெழுவகைத் தோற்றமாகிய தாப
ரங்கள் பத்தொன்பதுலட்சமும், ஊர்வனபதினைந்துலட்
சமும், தேவர்கள் பதினொருலட்சமும், நீருறைவன பத்
துலட்சமும், பறவைகள் பத்துலட்சமும், நாற்காலிகள்
பத்துலட்சமும், மானிடர் ஒன்பதுலட்சமும் ஆகக்கூ
டின எண்பத்துநான்குலட்ச சீவராசியின் பேதாபேதங்
களில் மிகவும் அற்பமா யென்பொழியாக்கையாகிய புழு
வாகப்பிறப்பித்தாலும் உனது பாதாரவிந்த திருவடிகளி
னிடத்துண்டாகிய அன்பு ஒருக்காலும் மறந்துபோகா
மையாகிய மதியையடியேனுக்கு அளித்தருளவேண்டும்.
எ-று. 1

நேரிசைவெண்பா.

எனக்கேதிருவரங்கனேயிராவெம்மான்
தனக்கேயடிமைதமியேன்-புனக்கேழ்
மருத்துளவோன்மேலன்றிமற்றொருவர்மேலென்
கருத்துளவோவாராயுங்கால்.

இ-ள். ஆராய்ந்து பார்க்குமளவில் எனக்குத் திரு
வரங்கத்தில் எம்பெருமானென்னும் பெயரினையுடையவ
னுகியும், எமக்குச் சுவாமியாகியும், புனத்திற் பசுமைமிக்க
நிறமுஞ் சுகந்தமுமுள்ள துளவமாலை யணிந்தவனுகியுமி
ருக்கிற அவன்றனக்கே தமியேனுகிய அடியேன்வந்து
அடிமையானது அவனையன்றி மற்றொருவராகிய தெய்
வங்களைப் பரமென்றடைந்து அவர்கள்மேலென்கருத்து
நாடத்தக்கதுண்டாகுமோ ஆகாது. எ-று. 2

சட்டளைக்கலித்துறை.

காலாயிரமுடியாயிரமாயிரங்கைபரப்பி
மேலாயிரந்தலைநாகங்கவிப்பவிண்பூத்தகஞ்சம்
போலாயிரங்கண்வளரும்பிரான்பொன்னரங்கனென்றே
மாலாயிரங்கவல்லார்க்கெய்தலாந்திருவைகுந்தமே.

இ-ள். ஆயிரங்கால்களும் ஆயிரமுடிகளும் ஆயிரங்கைகளுமுடையவனும் அந்தக்கைகளையெல்லாம் பரப்பிக்கொண்டு உகாந்தப்பிரளய வெள்ளத்தின் மேலே அநந்தனுகிய நாகம் ஆயிரம்பணமுடிகளைக் கவிக்க ஆகாசத்திலே பூத்த அம்போருகபுட்பம்போலாகி ஆயிரங்கண்மலர்களை மூகிழ்த்துக்கொண்டு துயின்றருளிய பிராணுகிய எம்பெருமானெழுந்தருளியிருக்கா நின்ற திருவரங்கமாகிய தலமென்று ஆசையுற்றிரங்கி மனோவாக்கு காயங்களினால் மதிக்கவுந் துதிக்கவும் வணங்கவும் வல்லவர்களுக்குப் பிரபஞ்சமாயையினது தடையின்றி அழகிய வைகுந்தத்திற் சேர்ந்திருந்து வாழ்கக் கிடைக்கும். எ-று.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வைகலந்த மூவிலைவே லீசற்கும் வாசவற்கும் வாசப்பூமேன், மெய்கலந்த நால்வேத விரிஞ்சனுக்கு மேலாய் வீற் றிருப்பர்மாதோ, பைகலந்த பாம்பணைமேற் றிருவரங்கப் பெருநகருட் பள்ளிகொள்ளுங், கைகலந்த நேமியான் றிருநாமத் தொருநாமங் கற்றூர்தாமே.

இ-ள். படத்தினையுடைய பாம்பாகிய அணையின் மேலே திருவரங்கமாகிய பெரியநகரத்தில் திருக்கண்வளர்ந்தருளிய கையில்தரித்த சக்கராயுதனுடைய ஆயிரந் திருநாமத்திலே யொருதிருநாமமாகிலுங் கற்றபேர்கள் கூர்மையுடைய சூலாயுதமேந்திய யீசுரனுக்குந் தேவேந்திரனுக்கும் வாசப்பூவான நறுமலர் நாற்றமிகுந்த தாமரையிலிருக்கும் சதுர்வேதத்துக்குரிய பிரமதேவனுக்கு மேலாகிய பதவியில் வீற்றிருப்பார்கள். எ-று. 4

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கற்றூரெனினும்பதினுலகுங்
கண்டாரெனினுந்தண்டாமிகுபற்
றற்றூரெனினுந்திருமாலடியா
ரல்லாதவர்வீடில்லாதவரே

பொற்றாமரையாள்கணவன்றுயிலும்
பொற்கோயிலேயேபுகழ்வார்பணிவார்
மற்றாரெனினும்பெற்றாரவரே
வானோர் திருமாமணிமண்டபமே.

இ-ள். சகலவேதபுராண சாஸ்திரமுதலான கலைகளையெல்லாங் கற்றார்களேயாயினும் மேலேழுலோகங் கீழேழுலோகமான பதினாலுலகங்களையெல்லாங் கண்டார்களேயாயினுந் தவிர்த்தற்கரியதாய் மிகுந்த ஆசாபாசங்களை யறுத்தவரேயாயினுந் திருமாலுக்கடியரல்லாதவர்களாயினராகில் அவர்கள் வீடு பேறில்லாதவர்களாய் மெலிவார்கள். பொற்றாமரையாளாகிய இலக்குமிகாந்தன் துயிலாநின்ற கோயிலாகிய திருவரங்கத்தை நம்பிக்கையாய்ப் புகழவும் பணியவுந் துடங்கினவர்கள் மேன்மக்களன்றி கீழ்மக்களாயினும் அவர்கள்வந்து பெற்றனரன்றோ வைகுந்தத்திலே வானவர்களுந் தொழத்தக்க மாட்சிமையுடைய மணிமண்டபமாகிய முத்திமண்டபம். எ-று. 5

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்.

மண்டலமும்விண்டலமுநின்றவடகுன்றமும்
வளைந்தமலையுங்கடலுமு
தண்டமுமகண்டமுமயின்றவர் துயின்றருள்
அரும்பதிவிரும்பிவினவிற்
கொண்டல்குமுறுங்குடகிழிந்துமதகுந்தியகில்
கொண்டுநுரைமண்டிவருநீர்
தெண்டிரைதொறுந்தரளமுங்கனகமுஞ்சிதறு
தென்றிருவரங்கநகரே.

இ-ள். மண்ணுலகையும் விண்ணுலகையும் நிலைநிற்கின்ற மகமேருகிரியையும் அதைச்சூழ்ந்தமற்றமலைகளையுஞ் சமுத்திரத்தையும் பழமையாகிய அண்டத்தையும் நவகண்டமல்லாத அகண்டத்தையும் அமுதுசெய்தருளிய அருளாளர் திருக்கண்வளரத் தக்கதாய் அரிதாகியபதியை ஆசையுடனே யாதென்று விரும்பிக்கேட்கில் மேகங்கள் படிந்து முழங்கப்பட்ட மேலைத்திசையிலிருந்திறங்கி மதகினை முட்டித்தள்ளி அகிற்கட்டைகளை யுருட்டிக்கொண்டு நுரைத்துவரப்பட்ட நீரிலேதெளிந்த அலைகளை மோதுந்தோறு மோதுந்தோறும் முத்தும்

பொன்னும் சிறப்பட்ட காவேரிநதிதீரத்தில் அழகின் மிகுந்த திருவரங்கமாகிய நகரம். எ-று. 6

புயவகுப்பு ஆசிரியவண்ணவிருத்தம்.

முதலடி.

தருகதிர்வழங்குதகடுபடுசெம்பொன்
னவமணிகுயின்றதொடியணியணிந்து
ககனவிலிடு நீலவெற்பொற்றிருந்தன,

நரியபுதுமன்றறிசைமுழுதுமண்ட
நறவுகுதிகொண்டதுளவணியலங்கன்
மதுகரமொருகோடிசுற்றப்புனைந்தன,

நளினமடமங்கைகுவலயமடந்தை
சனகனதணங்குபொதுவர்மகளென்றிவ்
வனிதையர்தனபாரமொத்தக்குழைந்தன,

நதிப்திசுழன்றுகதறிநுரைசிந்த
வரவகடுரிஞ்சியலறவலமந்து
வடவரையுடறேயநட்டுக்கடைந்தன.

இரண்டாமடி.

இகலியிருகுன்றிலிருசுடரெழுந்து
பொருவதெனவிம்பமதிமுகமிலங்கும்
இருகுழையிருபாடலைப்பச்சிறந்தன,

இணையறநிமிர்ந்துவலியொடுதிரண்டு
புகழொடுபரந்துபுழுகொடுமளைந்து
கலவையினணிசேறுதுற்றுக்கமழ்ந்தன,

எதிரொருவரின்றியகிலவுலகுந்தன்
அடிதொழவிருந்தவிரணியன்மடங்க
முரணியவரைமார்பமெற்றிப்பிளந்தன,

எறிகடல்கலங்கிமுறையிடவெகுண்டு
நிசிசரலிலங்கைபரசொடுமலங்க
வொருசிலையிருகால்வளைத்துச்செவந்தன.

மூன்றாமடி.

மிருகளவினின்றவிளவுகனிசிந்தி
மடியவிடுகன்றுகுணிலெனவெறிந்து
பறவையினகல்வாய்கிழித்துப்பகிர்ந்தன,

வெறிபடுகுருந்தைகமுறிபடவடர்ந்து
குடநடமகிழ்ந்துகுரவைகள்பிணைந்து
பொருதொழிலெருதேழுசெற்றுத்தணிந்தன,

வெடிபடமுழங்கியெழுமுகிலுமண்ட
ரொடுநிரைதியங்கவெறிதிவலைகண்டு
தடவரைகுடையாவெடுத்துச்சுமந்தன,

விழிவடவைபொங்கவெதிர்பொரநடந்த
களிறுளம்வெருண்டுபிளிறிடமுனிந்து
புகர்முகவிருகோடுபற்றிப்பிடுங்கின.

நான்காமடி.

அகலிடமுமும்பருலகமுநடுங்கி
அடயபமடியெங்களபயமெனவந்து
விழுதொறுமிடையூறகற்றிப்புரந்தன,

அருகுறவிளங்குமெருதிகிரிசங்கம்
வெயிலொருமருங்குநிலவொருமருங்கும்
எதிரெதிர்கதிர்வீசவிட்டுப்பொலிந்தன,

அருமறைதுணிந்தபொருண்முடியின்சொ
லமுதொழுகுகின்றதமிழினில்விளம்பி
யருளியசடகோபர்சொற்பெற்றுயர்ந்தன,

அரவணைவிரும்பியறிதுயிலமர்ந்த
அணிதிருவரங்கர்மணிதிகழ்முகுந்தர்
அழகியமணவாளர்கொற்றப்புயங்களே.

இ-ள். ஒளிரப்பட்ட வொளிகளை யுதவத்தக்க செம்பொற்றகட்டினாலும் நவரத்தினங்களினாலுஞ்செய்த கொடிமுதலாகிய பூஷணங்களையணிந்து வானவில்லிட்டு விளங்கப்பட்ட நீலமலையையொத்திருந்ததுவும், நவ்விதாகியமதுமணம் எட்டுதிசைகளையும்வளைக்கத் தேன்குடிகொண்ட அழகிய துளவமாலையை வண்டினங்களானது வொருகோடிக்குமேலும் வந்து சுற்றிக்கொள்ளத்தக்கதாகச்சூட்டினதுவும், தாமரைப்பூவில் மடமைமுதலியகுணத்தால்மிக்க மங்கையாகிய திருமகள் நிலமகள் சனகராசாவின்மகள் இடையர்மகளிர்களென்று சொல்லப்பட்டவிப்பெண்கள்மாருடனே கனத்தகொங்கைகளானது வொத்தும்படியாற் குழைந்ததுவும், சமுத்திரமானது சுழன்று கதறி நுரைகளைச்சிந்த ஆதிசேஷனாகிய அரவத்தின்

வாயிலகப்பட்டு மறுக்கமுற்றலற கலியா நிலைமையுடைத்
தாய் பதினாறாயிரம் யோசனை தூர மேல்நோக்கியதாய்ப்
பதினாறாயிரம் யோசனை தூரஞ் சுற்றளவுடையதாய் மேல்
விரிவு முப்பத்திராயிரம் யோசனை தூர முடைத்தாய்ப்
பதினாலுலகத்துக்கு மாதாரமான மகமேருகிரியினுடலந்
தேய்ந்துபோக நட்டுக்கடைந்தவும், மாறுபாடிரண்டு
மலையினிடத்தி விருசுடரென்னுஞ் சந்திராதித்தருதித்து
ஒருவருக்கொருவர் பொருவதுபோலக் கலைநிரம்பிய மதி
யினது விம்பம்போன்ற திருமுகத்திலே விளங்குகின்ற
இருகுழைகளிருபக்கம் அசையும்படிக்குச் சிறப்பித்திருந்த
துவும், தனக்கிணையொன்றுமின்றி நிமிர்தலையுற்று திண்
மையுடனே கூடித்திரண்டு புகழோடும்பொருந்தி விசால
மாய் நறும்புழுகினுடனே தோய்ந்து நால்வகைச் சாந்
தாகிய கலவையிலணியத்தக்கதா யிருந்ததுவும், இர
ணியனுடைய சவுரியமடங்க முரணியவென்னுந் திண்
ணியமலையையொத்த மார்பினைக்கண்டித்துப் பிளந்த
துவும், அலைகளையெறியுங் கடலாகியது கலங்கி அபய
மென்று முறையிடக்கோபித்து இராக்கதர்க்கிடமாகிய
இலங்கையை இராவணனுடனே நடுங்கி மயங்க ஒப்பற்ற
கோதண்டத்தினுடைய விரண்டுகொடியும் வளையச்செ
ய்து சிவந்ததுவும், கஞ்சனால் விடுபட்டுக் காட்டகத்தில்
வற்சாசுரனெனவன் மடிய அவன் மிகுந்த கவடமாயுரு
வெடுத்துநின்ற குழைக்கன்றைத் தானே குறுந்தடியாக
ப்பிடித்துச் சுழற்றி யங்ஙனநின்ற விளாவின்கனி சிந்த
விட்டெறிந்ததுவுமன்றி, அர்த்தராத்திரியி லாயர்பாடி
யிலே ஆயரோடுங்கூடி ஒரு தாமரைத்தடாகத்தில் வரும்
போது அங்குமொரு அசுரன் குருக்காகிப் புள்ளாய்வி
ழுங்குதலும், அப்புள்ளின தகன்றவாயைக் கிழித்துப்
பகிர்ச்சியாகப் பகிர்ந்ததுவும், மணங்கமழுங் குருந்தமர
மானது முறிபடும்படியாய் நெருங்கிக் கையைக்கொட்
டிக் குவிக்குங்குடமென்னுங் கூத்தை மகிழ்ந்தாடியது
வும், அதுவுமன்றிக் கைகளைக்கோத்தாடலாகிய குரவை
யாடலைப் பிணைத்தாடி மற்பொருதொழில் வல்லவரை
இத்தனையுஞ்செயித்துச் சினந்தணிந்ததுவும், அண்டமு
கடும் வெடிக்கமுழங்கி யாயர்கூட்டமுந் திகைக்கச் சத்த
மேகமுங் கூடிக்கொண்டு கற்களைவிட்டெறிவதுபோலச்
சொரியு மழையைக்கண்டு விலக்க விசாலமான கோவர்த்

தனகிரியைக் குடையாயெடுத்துச் சுமந்ததுவும், கண்ணிலே வடவாக்கினிப்போல பொறிபறக்க வெதிர்த்துப் பொருதவந்தயானை மனந்திடுக்கிடப்பயந்து வீறிட்டலற முனிந்து புகராகிய புள்ளிபாய்ந்த முகத்தையுடைய அந்த மத்தகெஜத்தின்கொம்பு இரண்டையும் பற்றிப் பிடுங்கினதுவும், மண்ணுலகமும் விண்ணுலகமும் நடு நடுங்கி யபயமபய மடியோங்களென்றடைந்து திருவடியிற் றெண்டனாகவிழுந்தோரும் அவர்களுக்குற்ற விடுக்கண்டவிர்த்துக் காத்ததுவும், இரண்டருகிலுமுற்று விளங்குங்கீர்த்தியோர்மேலெறிகின்ற சக்கரமுஞ் சங்கும் ஒருபக்கத்திற் சூரியனது வெயிலு மொருபக்கத்திற் சந்திரனது நிலவு மொன்றுக்கொன்றெதிர்த்து ஒன்றின்மேல் ஒன்று கிரணங்களைவிட்டெறிக்கச்சிறப்பித்ததுவும், அரிதாகிய வேதத்திற்றுணிந்து சொல்லிய வேதாந்தப்பொருளை இனியசொல்லாகிய வமுதமொழுகப்பட்ட தமிழினாலோதியருளிய சடகோபாழ்வாருடைய சொல்லாகிய பாமாலையைச் சூட்டப்பெற்றுயர்ந்ததுவும் யாதெனிற் பாம்பாகியவணையை விரும்பி யதன்மேல் யோகநித்திரையா யமர்ந்தருளிய திருவரங்கேசர் நீலமாணிக்கம் போல விளங்கிய முகுந்தர் அழகியமணவாளரானவருடைய வெற்றியைப்பொருந்திய தோள்கள். எ-று. 7

நேரிசைவெண்பா.

புயநான்குடையானைப்பொன்னரங்கத்தானை
அயனைத்திருவுந்தியானை - வியனாம்
பரகதிக்குக்காதலாற்பாடினேன்கண்டீர்
நரகதிக்குக்காணாமலான்.

இ-ள். சதுர்ப்புயங்களை யுடையவனைத் திருவரங்கமாகிய தலேச்சுரத்தை யுடையவனைப் பிரமதேவனைப் பெற்ற உந்திக்கமலத்தை யுடையவனை அடியேனாசையாய் எதுவேண்டிப் பாடினேனென்பீராகில் நரகத்தையுடைய எமலோகத்தை நாடாமல் பலனதிகமாகிய கதியையுடைய பரலோகமே யடையவேண்டுமென்னும் பரிவினாலேபாடினேன் கண்டீரோ. எ-று, 8

கட்டளைக்கலித்துறை

நானந்தவைகுந்தநாடெய்திவாழிலென்ஞாலத்தன்றி
ஈனந்தவாதநிரயத்துவீழிலென்யானடைந்தேன்

கோனந்தன்மைத்தனை நான்முகன் றந்தையைக்கோயிலச்
சானந்தனையெனக்காராவமுதையரங்கனையே. [சு

இ-ள். நானிந்த ஞாலமாகிய பூமியின்கண்ணெல்லாம் அந்தவைகுந்தமாகிய நாட்டினிடத்திலுஞ் சென்று வாழமாட்டேன், ஈனமாகிய வீழாத நரகத்தினிடத்திலுஞ்சென்று வீழமாட்டேன், எனக்கொருபற்றுக்கோடாக ஒருவனைப் பரமென்றடைந்து விட்டேன். அவனாரோவென்னில், ஆயர்குலாதிபனான நந்தகோபாலனுக்கு நந்தனானவன், நான்முகனான விதாதாவுக்குப் பிதாவானவன், கோயிலாகிய வரங்கத்தி லச்சுதானந்தனானவன், அதுவுமன்றி உண்ணுந்தோறு முண்ணுந்தோறும் எங்களுக்குத் தெவிட்டாத வமுதத்தையொத்த அரங்கநாயகனையே அடைந்தேன். எ-று. 9

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அரவினடித்தானுமுரவிலொடித்தானும்
அடவிகடந்தானும்புடவியிடந்தானும்
குரவைபிணைத்தானும்பரவையணைத்தானும்
கோசலைபெற்றானும்வீசலையுற்றானும்
முரனையறுத்தானுங்கரனையொறுத்தானும்
முத்தியளித்தானும்பத்திவிளித்தானும்
பரமபதத்தானுஞ் சரமவிதத்தானும்
பாயல்வடத்தானுங்கோயிலிடத்தானே.

இ-ள். அரவமாகிய காளிங்கன் முடிமேல்நின்று நடித்தவனும், உரமுடையவுமாபதிவில்லை யொடித்தவனும், அடவியாகிய வாரணியத்தில் மாதாபிதாவாக்கியப்படிக்கு நடந்தவனும், புடவியாகிய பூமியை ஏனமாயிடந்தவனும், குரவையாகிய கூத்துக்குக் கையைக்கோர்வையாகப் பிணைத்தவனும், பாவையாகிய வுவரியைப் பருப்பதங்களாற் றிருவணைசெய்தவனுங், கோசலையான தசரதன்றேவி பிள்ளையாகப் பெற்றவனும், வீசப்பட்டவலையாகிய க்ஷீரசாகரத்திற் கண்டுயிலுற்றவனும், முரனாகிய வசுரன்முடியை யறுத்தவனும், கரதூஷணன்முதலாகிய வரக்கரை வெறுத்துக் கடந்தவனும், தன்னைவினையத் தலைவனையறிந்த தபோதனருக்கு முத்தியைக்கொடுத்தவனும், குவலயாபீடமென்னும் அத்தியை மதமடக்கினவனும்,

அன்றியும் அத்தியாகிய யானை ஆதிமூலமென்றழைக்க வந்தவனுமாய், பரமபதத்தை யுடையவனுஞ் சரமரூபா யமாகிய சுகருடனும், பாயலாகப் படுக்குமிடமாக வடபத்திரத்தை மகிழ்ந்தவனுமாரோவென்னில் கோயிலாகிய பீடமே குடியாகியவரங்கநாயகனேயாகும். எ-று. 10

கட்டளைக்கலித்துறை

தானே தனக்கொத்ததாட்டாமரைக்குச்
சரண்புகுந்தாள்
ஆனேனினியுன்னருள றியேனென்
தாருயிரே
தேனேயென்றீவினைக்கோர்மருந்தேபெருந்
தேவர்க்கெல்லாங்
கோனேயரங்கத்தரவணைமேற்பள்ளி
கொண்டவனே.

இ-ள். என்னுடையவுயிர்க் குயிரானவனே! அப்படி யுயிர்க்குயிராயும் ஒழியாதவின்பத்தை யுதவுதலான தேனிலு மிரதித்தவனே! எனது தீவினையாகிய பிறவித் துன்பந் தீர்ப்பதற்கொரு அருமருந்தானவனே! பெருமைமிக்க தேவதேவர்திபனே! திருவரங்கத்திலே பாம்பணையில் பள்ளிகொண்டவனே! தனக்குத்தானே ஒப்பாகிய உனது சரணாரவிந்தத்துக்கே சரணடைந்த அடிமையானேன் இனிமே லுனது திருவருளிருந்து நடத்தும்படி யின்னதென்றறியேன். எ-று. 11

மேகவிடுதூது நேரிசைவெண்பா.

கொண்டல்காளும்மைக்குறித்தேதொழுகின்றேன்
அண்டர்காணுவரங்கத்தம்மானைக்-கண்டு
மனத்துள்ளவத்தைப்படுமென்மையெல்லாஞ்சொல்லி
புனத்துளவத்தைக்கொணரீர்போய்.

இ-ள். வாருங்கள் மேகங்காள்! உங்களைக் குறித்துத் தொழுகிறேன் எவர்களாலுமளவிட்டுக் காண்பதற்கரிய திருவரங்கத்திலே எமக்குச் சுவாமியாயிருந்துள்ளவனை நீங்கள் போமளவிற் கண்டு சந்தித்து எனக்கெய்தாமையினால் இருதயத்திலிடர்ப்படலாகிய எனதுமையலாகிய வாசையை தெரியப்படுத்தி அவரணிந்த புனத்திற் பச்சென்ற பசுந்துழாய்மாலையைக் கொண்டுவரவேண்டும். எ-று. 12

கலிவிருத்தம்.

போயவனியிற்சிலபுறச்சமயநாடும்
பேயறிவைவிட்டெழுபிறப்பையுமறுப்பீர்
ஆயனையனந்தனையனந்தசயனத்தெம்
மாயனையரங்கனைவணங்கிமருவீரே.

இ-ள். வாரீருலகத்தீர்காள்! மனத்திடமின்றி வையங்கடோறும் மலைத்திகிரிபோற் சுற்றித்திரிந்து சித்தப்பிராந்தியாய்ப் பலபல சமயங்களைப் பயனின்றியே நாடப்பட்ட பேதைமையாகிய பேயறிவைக் கைவிட்டு எழுவகைப்பட்ட பிறவியின் வேரைக்களைந்து பிறவாமையாகிய வீட்டின்பத்தை மேவுவீர்கள். ஆயனான நந்தகோபாலனை, யனந்தனானவனை, யனந்தனான சேஷசயனத்திற் றிருக்கண்வளர்ந்தருளிய வெம்முடைய மாயவனை, திருவரங்கத்தையுடையவனை வணங்கி யவருடைய திருவடித்தாமரையே ஸ்திரமென்று சேருவீராகவேண்டும். எ-று.

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மருவுதந்தையுங்குருவுமெந்தையு
மருள்கெடுப்பதுமருள்கொடுப்பது
உருகுநெஞ்சமும்பெருகுதஞ்சமும்
உரியஞானமும்பெரியவானமும்
திருவரங்கனாிருவரங்கனா்
செங்கண்மாயனெங்களாயனா்
அருண்முகுந்தனா்திருவைகுந்தனா்
அமலநாதனா்கமலபாதமே.

இ-ள். மருவி வளர்க்கப்பட்ட மாதாபிதாவுந் தேசிகனுந் தெய்வமும் மருளைக்கெடுக்கப்பட்டதும் அருளைக் கொடுக்கப்பட்டதும் உருக்கமுள்ள நெஞ்சமும் பெருக்கமுள்ள தஞ்சமாகிய பற்றுக்கோடும் உரிதாகிய ஞானமும் பெரிதாகிய வானமென்னும் பரலோகமுமான துவும் எதுவோவென்னில்: இங்ஙனஞ்சொன்ன தொன்றுமல்ல, திருவரங்கமாகிய கோயிலையுடையவர், இருவரங்கராகிய யீசுரனையும் பிர்மாவையுந் தமதங்கத்திலு முடையவர், செங்கமலம்போன்ற திருநயனத்தையுடைய மாயனானவர் எங்களுக்கினைந்த வாயனென்னும் நந்தகோபனானவர், அன்றியும், அருளுருவமான முகுந்தனானவர், ஸ்ரீவைகுந்தத்தில் வாழப்பட்டவர், அமலனாகிய நாதனான

வரங்கநாயகருடைய திருவடித் தாமரையே அப்படிக் கெல்லாமானது. எ-று. 14

இதுவுமது.

பாதியாயழுகியகால்கையரேனும்
　　பழிதொழிலுமிழிகுலமும்படைத்தாரேனும்
ஆதியாயரவணையாயென்பராகில்
　　அவரன்றேயாம்வணங்குமடிகளாவார்
சாதியாலொழுக்கத்தான்மிக்கோரேனுஞ்
　　சதுர்மறையால்வேள்வியாற்றக்கோரேனும்
போதின்முகன்பணியப்பள்ளிகொள்வான்
　　பொன்னரங்கம்போற்றாதார்புலையர்தாமே.

இ-ள். பண்ணுதபாவங்களைப் பண்ணிப் பாதியாயழுகிப்போன கரசரணாதிகளையுடையரேயாயினும், பழிப்புக்கிடமாகியதொழிலு மிழிவாகிய குலமு முடையவரேயாயினும் அவர்கள்வந்து அன்புடனே வாக்குமனதுக்கு மளவிடப்படாத வாதியானவனே! அரவணையிலமர்ந்தருளு மாதிகேசவனே யென்று ஒருதரஞ்சொல்லுவார்களேயாகில் அவர்களேகண்டீர் நாங்கள் நமஸ்கரிக்கப்பட்ட நாயன்மாரானவர்கள், அதுவன்றிச் சாதியினாலு மொழுக்கத்தினாலு முயர்ந்தவர்களேயானாலும் வேதபாராயணத்தினாலேயும் வேள்விசெய்வதினாலுமே தக்கதகமையோரானாலுந் தாமரையிற்பிறந்த சதுமுகப்பிர்ம்மா வந்து பணிந்து பூசிக்கப் பாம்பணையிற்பள்ளிகொண்ட பரமபுருஷோத்தமனுடைய பொன்னரங்கத்தைப் போற்றிசெய்யாதொழிவார்களேயாகில் அவர்கள் கடையருக்குங் கடையரேயானபேர்கள். எ-று. 15

கட்டளைக்கலித்துறை.

[கொழிக்கும்
புலையாம் பிறவி பிறந்தென்செய் தோம்பொன்னி பொன்
அலையார்திருவரங்கத்தெம்பிரானமதன்னையொடும் [ச்
தொலையாதகானங்கடந்தவன் றொட்டடந்தோறும்புல்லாய்ச்
சிலையாய்க்கிடந்திலமேநெஞ்சமேகழறீண்டுகைக்கே.

இ-ள். பொய்மையாகிய கடைப்பட்ட செனனத்தையெடுத்தென்னபலனை யடைந்தோம் ஏழைமனமே!

பொன் முதலாகிய மணிகளைக்கொழிக்கு மலைகணிரம்பி யகன்றகாவேரியினிடத்திலே அழகிய வரங்கத்திலுள்ள வணங்கிய வெம்முடைய பிராணனவன் எனது தாயாகிய சீதாபிராட்டியாருடனே கூட நடந்து கடக்குதற்கரியகாட்டைக்கடந்து சென்றவக்காலத்திலே அவர்கடந்தருளிய அவ்வழிகள்தோறும் புல்லாயாகிலுங் கல்லாயாகிலும் பிறந்து கிடக்கவரினும் தவஞ்செய்துக்கொள்ளமாட்டாமற் போனேனமே அவரது திருவடிகளையடையும்பொருட்டு. எ-று. 16

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தீண்டா வழும்புஞ் செந்நீருஞ் சீயு நரம்புஞ் செறிதசையும், வேண்டா நாற்ற மிகுமுடலை வீணே சுமந்து மெலிவேனோ, நீண்டாய் தூண்டா விளக்கொளியாய் நின்று யொன்று யடியாரை, ஆண்டாய் காண்டா வனமெரித்த வரங்கா வடியேற் கிரங்காயே.

இ-ள். தீண்டத்தகாத அருவருக்கப்பட்ட வழும்பும் உதிரமும் சீழும் நரம்பு மிடைக்கிடையே செறியப்பட்ட மாங்கிஷமும் விரும்பப்படாத துற்கந்தமு மிகுந்த மலபாண்டமாகிய வுடம்பைப் பொல்லாத வினையைச்செய்த அடியேனெடுத்துச் சுமந்து மெலியக்கடவேனோ குறளுருவமா நீண்டு வளரா நின்றவனே! தூண்டாதசுடரினது சோதிப்பிரகாசமான விளக்கொளியாயெங்கும் பரந்து நின்றுயென்பது அறிந்திருந்து மறிந்துகொள்ளமாட்டாத மூடத்தன்மையை யுடையேனையும் ஒரு பொருளாயாட்கொண்டருளினவனே! காண்டாவனந்தகனஞ் செய்தருளிய வரங்கநாயகனே! அடியேன் கடைத்தேறும்படிக்குத் திருவுளத்திலிரங்கி இரக்ஷிக்கவேண்டும். எ-று. (அடியேனையாண்டா யென்பதையறியாமற் பின்னுமரங்காவடியேற் கிரங்காயே யென்று சொல்லவேண்டுமோ வென்னில், மேகமானது வானீரைச்சுத்தோதகமாக்கி வைத்தாலு மற்றுமுருண்டோடிப் பழையபடிக்கு வாரிநீராமாறுபோல அப்படியாண்டருளினாலும் அஞ்ஞானத்தாற் கலக்கித்திரும்பித் தேடாமலருளவேண்டுமென்பது கருத்து.) 17

தவம் கலித்துறை.

காயிலைதின் றுங்கானி லுறைந்துங்கதிதேடித்
தீயிடை நின் றும்பூவலம்வந் துந்திரிவீர்காள்
தாயிலுமன்பன்பூமகணன்பன் றட நாகப்
பாயன்முகுந்தன்கோயிலரங்கம்பணிவீரே.

இ-ள். காயிலைமுதலாகிய கந்தமூலபலங்களைப்புசித்தும் வனவாசஞ்செய்தும் கெதியைவிரும்பி பஞ்சாக்கினிமத்தியிலிருந்தும் அரிதாகிய தபசைச்செய்தும் பூமியிற் பிரதக்ஷணமாய்வந்துந் திரியப்பட்டவர்களே சொல்லக்கேளீர்! அன்னைபிதாவிலு மதிகமான அன்புண்டானவன் பூமகளாகியசீதாதேவிக்கு நண்பனுகச் சீதரனென்றிருக்கின்றவன் விசாலமான பாம்பாகிய பாயலிற்பள்ளிகொண்டருளிய முகுந்தனெனவன் அப்படியானவனுடைய கோயிலாகிய திருவரங்கத்தைச் சென்று கண்டு வணங்குவீர்களாகவேண்டும். அப்படிவணங்கில் வருத்தமிலெளிதிற் றனே எல்லாப்பலனையு மடைந்துய்யலாம். எ-று. 18

இதுவுமது கட்டளைக்கலித்துறை.

வீரரங்காகியவைவரைமாற்றிவிடவரவின்
போரரங்காகநடித்தபொற்றுள்பற்றிப்பொன்னிநன்னீர்ச்
சீரரங்கா நின்றெழும்பனென்றேசிந்தைசெய்யிலது
கூரரங்காநெஞ்சமேவஞ்சமாயக்கொடுவினைக்கே.

இ-ள். தோத்திரந் - தொக்கு - சட்சு - சிங்குவை- யாக்கிராணமென்னும் ஐம்பொறியாகிய விவையற்றின் வழித்தான் சுத்த - பரிச - ரச - கெந்தமென்னுந் தன்மாத்திரையாகிய வைம்புல வேடராகிய வீரர்களாலலைத்தெழு நெஞ்சிலுகை ஞானவாளால் மடித்துநற்செயிறுடைய நாகபடத்தினின்ற தன்பேராகிய பூசலேயாடரங்கமாக வாடியருளிய வழகிய திருவடிகளையடைந்து பொன்னியாகிய காவேரியின் புண்ணியதீர்த்தச் சிறப்பினையுடைய திருவரங்கேசனே யானுன்னுடைய அடியார்க்குமடியனென வடிமையெனநைந்துருகி நெஞ்சமே நீகணப்போதாகிலுங் கருதினதுண்டாகில் அதுவே பற்றுக்கோடாகவைத்து தம்மை வஞ்சித்து மயங்கப்பண்ணுங்

கொடியவினையென்னு மிரும்பிற்குக் கூரிய அரமாம் அதையறுத்துத்தள்ளுதற்கு. எ-று. 19

நேரிசை வெண்பா.

கேசவனையேசெவிகள்கேட்கத்திருவரங்கத்
தீசனையேசென்னியிறைஞ்சிடுக-நேசமுடன்
கண்ணனையேகாண்கவிருகண்ணிணர்கொள்காயாம்பூ
வண்ணனையேவாழ்த்துகவென்வாய்.

இ-ள். என்னுடைய அவயவங்களி லிரண்டுசெவிகளும் எவ்விடத்திலு மெக்காலத்திலும் எத்துன்பமெய்துமிடத்திலு மற்றொன்றையுங்கேளாமற் கற்றுணந்தமாய்க் கேசவனுடைய கீர்த்தியையேகேட்கக்கடவது. அன்றியும், என்னுடைய சென்னியாகிய சிரம் மற்றொருதெய்வங்களை வணங்காமல் திருவரங்கேசனாகிய தெய்வத்தையே வணங்கக்கடவது. அன்றியும், என்னுடைய உறுப்புகளிலுயர்ந்த இரண்டுகண்களுமாசையாக யாதொன்றையுங் காணமற் கண்ணனைத்தானே காணக்கடவது. அன்றியும், என்னுடைய வாயானது வீணிலே யொன்றைத் துதியாமல் காயாம்பூவண்ணனாகிய கடவுளையே துதிக்கக்கடவது. எ-று. 20

இரங்கல் எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வாயினிரங்கினையாரமறிந்தனை
வால்வளைசிந்தினை தண்
பாயலையுந்தினைமாலையடைந்தனை
பாரிலுறங்கிலையால்
கோயிலரங்கனைமாகனகந்திகழ்
கோகனகம்பொலியும்
ஆயிழைநண்பனை நீயும்விரும்பினை
யாகுநெடுங்கடலே.

இ-ள். வாராய் நெடியகடலே என்னைப்போல நீயுங்கோயிலாகிய திருவரங்கத்திலுள்ள வரங்கநாயகனைப் பெருமைமிக்க கனகமயமாய்க் கதிர்விட்டிலங்குங் கமலமலரிற் பொலிவுபெற்ற வாயிழையாகிய கமலைக்குநட்பான காதலனை விரும்பினவளாகவேண்டும். அஃதெத்தன்மைத் தென்னையாகில், அவர்வந்தணையாத வாற்றாமை

யினல் யான் வாயினலிரங்கிப் புலம்புகிறதுபோல நீயு முன்வாயினலிரங்கிப் புலம்புகிருய், அதுவுமன்றி யான் ஆபரணமான முத்தங்கங்களை வெறுத்தெறிவதுபோல நீயும் ஆரமான முத்தங்களை வெறுத்தெறிகிருய், அது வுமன்றி யான் வால்வளையாகிய கையிலணிந்த வெள்வ ளைகளைச் சிந்திவிடுகிறதுபோல நீயும் சங்கங்களாகிய வெள்வளைகளைச் சிந்திவிடுகிருய், அதுவுமன்றி யான் கண்படைகொள்ளுந் தண்மைபொருந்திய;பாயலைவிரும் பாமற் றள்ளிவிடுகிறதுபோல நீயும் பாயப்பட்ட அலை யாகிய பாயலைத் தள்ளிவிடுகிருய், அதுவுமன்றி யான் மயலாகிய மாலையடைந்ததுபோல நீயுமருளினதொழுங் காகிய மாலையடைந்தாய், அதுவுமன்றி யானிரவோரு கமா யுறங்காமைபோல நீயுமுறங்காமையாயிருந்தாய். ஆகையால் யானெருத்தியு மிவ்வாருயினேனென்றிருந் தேன் என்னேடொக்க நீயு மிவ்வாருயினேயோவென்று தலைவி கடலின்மேல் வைத்திறங்கினது. எ-று. மாலை யடைந்தனை யென்பதற்கு மாலென்பது பெருமையாத லாற் பெருமையை யடைந்தாயென்றுரைப்பாருமுளர்.()

இதுவுமது கலிநிலை வண்ணத்துறை.

கடல்வழிவிட நிசிசரர்பொடிபடவிருகண்சிறி
வடகயிலையிலெழுவிடைதழுவியதுமறந்தாரோ
வடலரவமளியிலறிதுயிலமருமரங்கேசர்
இடர்கெடவருகிலர்முருகலர்துளவுமிரங்காரே.

இ-ள். முற்காலத்திற் சீதையென்னுமொரு பெண் ணைவேண்டிக் கடலானது அஞ்சி வழிவிட்டுவணங்கச் சேதுபந்தனஞ்செய்துபோய் இலங்கையிலுண்டான இ ராவணன் கும்பகர்னன் முதலான அரக்கரெல்லாமா ண்டு தூளிபடலமாகத் திருக்கண்சிவந்ததுமன்றி மற் றும் வெள்ளிமலையிலும் விசேஷித்து விளங்கப்பட்ட விடைகளாகிய எருதுகளேழையுஞ் சத்தியையென்னு மொருபெண்ணுக்காத் தழுவி யவளைமணந்ததுவு மற ந்துவிட்டாரோ வென்னவே மறவாமல் செய்தாரெனப் படுமாதலால் என்னுடையவிடருங் கெடும்படிக்கிசைந்து வந்தணைந்தவருமல்ல, அப்படியணைவதற் கியையாராகில் துளவமாலையையாகிலு மிரங்கித் தந்தவருமல்ல, வஸியி

னையுடைய அரவாகிய வமளியில் யோகநித்திரையா யமைத்தருளிய வரங்கநாயகரானவராதலால் அவரருளானது ஒருதன்மையா யிருந்திலதென்! எ-று. 22

நேரிசை வெண்பா.

இரங்கத்தனித்தனியேயெய்துகின்றதுன்பத்
தரங்கத்தையேதாற்றடுப்பீர்-அரங்கர்க்குக்
கஞ்சந்திருப்பாதங்கார்மேனியென்றீவர்பால்
நெஞ்சந்திருப்பாதநீர்.

இ-ள். சமுசாரமாகிய சாகரத்திலழுந்தித் தளர்ச்சியற்றிரங்கும்படிக்குத் தனித்தனியே யொன்றின்மேலொன்று யோயாமலோடி வரப்பட்ட மாயாவிகாரமாய் மட்டிற்கரிய மனோதுக்கமாகிய தரங்கமென்னு மலைகளையே கைக்கொண்டு தடுத்துய்வீர். ஏழைகளால் அரங்கநாயகனார், கம்போருகம்போலும் அழகிய திருவடியே அழுங்கார்மேகம்போலுங் கரிய திருமேனியென்றும் உவமிக்கப்படாமைக் குவமித்துய்யவேண்டித் தீயநெறிக்கட்செல்லுஞ் சித்தத்தை அந்நெறிக்கட்செல்லாமல் அவர்பாலிற் செல்லத் திருப்பமாட்டாததிடசித்தமில்லாத நீங்கள். ()

இரங்கல் தாழிசை.

நீரிருக்கமடமங்கைமீர்கிளிகட்டாமிருக்கமதுகரமெனை
நிறைந்திருக்கமடவன்னமுன்னநிரையாயிருக்கவுரையாமல்யா
னிருக்கினுமென்னெஞ்சமல்லதொருவஞ்சமற்றதுணையில்லையென்
றுதாத்திரெனுமிதுதுவிட்டபிழையாரிடத்துரைசெய்தாறவேன்
சீரிருக்குமறைமுடிவுதேடரியதிருவரங்கரைவணங்கியே
திருத்துழாய்தரில்விருப்பியேகொடுதிரும்பியேவருதலின்றியே
வாரிருக்குமுலைமலர்மடந்தையுறைமார்பிலேபெரியதோளிலே
மயங்கியின்புறமுயங்கியென்னையுமறந்துதன்னையுமறந்ததே.

இ-ள். வாருங்கள் மடப்பத்தினையுடைய மங்கைமீரே! என்மனதிற்கிசைந்த நீங்களனைவருமிருக்க நானுசையாய் வளர்த்த கிளிகளுமென்கையிலிருக்க மணங்களுக்காகவராநின்ற வண்டுசாதிகளும் நிறைந்திருக்க மடமையையுடைய பேடையன்னங்களும் முன்னே நிரைநிரையாயிருக்க இவையெல்லாம் நம்பாமலெவர்களிருந்தாலும் என்னிதயத்தைவிட வேறொரு விசுவாசமான துணையில்லையென்று விசாரித்துத் துணிந்து ஐயப்

படாமலாதாவினுடனே யதைத்தூதனுப்பி யான்மோ சம்போனபிழையை நாணமின்றி முகம்பாராதாரிடத்தி லேசொல்லியாறப்போறேன். அவையாதெனில், என் னிதயமானசெய்திச் சிறப்பினையுடைய வேதமுடிவிலே யும் திருவரங்கரைக்கண்டு சேர்ந்து தெண்டன்செய்து விண்ணப்பஞ் செய்கையால் அவரிரங்கித் திருத்துழாய் மாலையைத் தந்தாராகில் விரும்பிவாங்கிக்கொண்டு திரும் பிவரவேண்டுமென்பதில்லாமல் கைச்சார்ந்த கனதனத் தையுடைய மலர்மடந்தையாகிய மகாலட்சுமி வாசமாகிய அவர் மார்பினுடைய அழகிலேயும், பெரிதாகிய தோளி னையுடைய அழகிலேயுமயங்கி இன்பமுறப்பொருந்தி என்னையு மறந்து தூதாகப்போன தன்னையுமறந்துவிட் டதாகி உலகத்திலே துன்பத்திற்கியாரே துணையாவர். தம்முடையநெஞ்சந்துணையல வழியென்பதென்னிடத்தி லிருக்க யான் யாரைவெறுப்பேன். எ-று. 24

இதுவுமது - நேரிசைவெண்பா.

மறக்குமோகாவின்மதுவருந்தியப்பாற்
பறக்குமோசந்திதிமூன்பாமோ-சிறக்கத்
தருவரங்கள்கேட்குமோதாழ்க்குமோநெஞ்சே
திருவரங்கர்பாற்போனதேன்.

இ-ள். :நான் நமது திருவரங்கேசரிடத்திலே தூதா கச்செலுத்தின வண்டானது அங்ஙனஞ்சென்றவுடனே என்னை மறந்துபோய்விடுமோ, அல்லவென்று பூங்கா விலேபோய்ப் புஷ்பங்கடோறும் மதுக்களை மகிழ்ந்து பானம்பண்ணி அப்பாற் பறந்துதான் போய்விடுமோ, அல்லவென்று சந்நிதிக்கு முற்பட்டு நிற்குமோ, அல்ல வென்று சிறப்பிக்கும்படிக்கு அவர்தரப்பட்ட வரங்களைக் கேட்டு நிற்குமோ, அல்லவென்று சற்றுத் தாழ்ந்துதா னிற்குமோ யானிவ்வகைத்தோன்றி யாதுமறிந்திலேன் என்செய்வேன். எ-று. 25

அம்மானை - மடக்குக் கலித்தாழிசை.

தேனமருஞ்சோலைத்திருவரங்கரெப்பொருளும்
ஆனவர்தாமாண்பெண்ணலியலர்காணம்மானை
ஆனவர்தாமாண்பெண்ணலியலரேயாமாகில்
சானகியைக்கொள்வாரோதாரமாயம்மானை
தாரமாய்க்கொண்டதுமோர்சாபத்தாலம்மானை.

இ-ள். வண்டுசாதிகள் மருவாநின்ற பூங்காவனஞ்சூழ்ந்த திருவரங்கத்தினிடத்திலே யெம்பெருமானா ரெழுந்தருளியிருக்கப்பட்டவர் ஆணுமல்லாத பெண்ணுமல்லாதவர் அலியுமல்லாதவராகில் சானகியாகிய சீதையைத்தாரமாய்க் கொள்கைக்குத்தகுமோவென்றில் அம்மானையப்படித் தாரமாகக்கொண்டது மொருசாபமாகிய வில்லையொடித்ததனால் அம்மானை. எ-று. (அரியது பாடிலம்மானையாதலால் அப்படித்தாரமாய்க்கொண்டது ஒருசாபகாரணத்தாலென் றுள்ளுரைத்தமையு மறிந்துகொள்க.) 26

இரங்கல் - மடக்குத்தாழிசை.

மானையெய்தவ ரின்னமென்மட மானையெய்திலர்நேமியா
மாலைதந்தவர்பைந்துழாய்மதுமாலைதந்திலரிந்திரன் [ன்
சோனைமாரிவிலக்கிவிட்டவர்சொரிகண்மாரிவிலக்கிலார்
சுரர்களுக்கமுதங்கொடுத்தவர்சோதிவாயமுதங்கொடார்
தானையைவர்கொடிக்களித்தவர்தானைகொண்டதளிக்கிலா
சங்க[illegible]க்கிரவைத்தடுத்தவர்தையலுக்கிரவைத்தடார் [ர்
ஆனைமுன்வருமன்புளார்முலையானைமுன்வருமன்பிலார்
அணியரங்கர்நடத்துநீதிய நீதியாகவிருந்ததே.

இ-ள். முன்பு மாரீசனாகிய மானையம்பினாலெய்தவரிப்போ இன்னமுமென்னுடைய மடமானோக்கத்தினாலே மானையொப்பாளை யெய்திலரென்னவே எய்தப்பெறுகின்றில ரென்பத யிற்று. அன்றியுஞ் சக்கராயுதத்தினாற் பொழுதைமறைத்து மாலையாகிய செவ்வந்திமாலையைத்தந்தவர் பசுமைபொருந்திய துளவமாலையைத் தந்திலர். அன்றியுந் தேவேந்திரனால் விடப்பட்டுவந்து பொழியப்பட்ட சோனைமழையை விலக்கிவிட்டவர் சொரியப்பட்ட கன்மாரியை விலக்கிவிடுகின்றிலர். அன்றியுந் தேவர்களுக்கெல்லா மமிர்தத்தைக்கொடுத்தவர் செவ்விய வொளிசிறந்த தமது திருவாய்மலரிடத் துண்டாகியவமிர்தத்தைக் கொடுக்கிலர். அன்றியும் ஐவர்கொடியாகிய துரோபதைக்கு மாளாத்துகிலையளித்தவர், இங்ஙனமென் சிறியபேதைத்தன்மையுடையவட்குச் சரிந்துசோர்ந்த துகிலையளித்திலர், சங்கரருக்கிரவச்சத்தைத் தடுத்தவர் தையலானவட் கிரவு நீட்டிக்குமச்சத்தைத் தடுக்கிலர். அன்றியுங் கஜேந்திரனாகிய யானைக்கு முற்பட்டு

வரும்படிக்கு அன்புண்டானவர். மூலையாகிய கொங்கைப் போரானைக்கு முற்பட்டுவரும்படிக் கன்பில்லாதவராயிருந்தார் ஆகையால் அழகியதிருவரங்கேசர் நடத்துகின்ற நீதியெல்லா மனீதியாயிருந்தது. எ-று. (இவையெல்லா முரண்டோடையாய் முடித்தவாறறிக) 27

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இருளினும்வெளியினுமருளினுந்தெருளினும்
இன்பமேயடையினுந்துன்பமேமிடையினும்
ஒருவர்முன்புகழினுமிருவர்பின்பிகழினும்
ஊனிறந்தழியினும்யான்மறந்தொழிவனோ
சுருதிநின்றோலிடுங்கரதலந்நாலொடும்
துவளுநூன்மார்பமும்பவளவாய்மூரலும்
திருவரங்கேசர்தஞ்சுருள்கருங்கேசமும்
செய்யநீண்முடியுமத்துய்யசேவடியுமே.

இ-ள். இருளாகிய போதிலும் பகலாகிய போதிலும் மாயையின்வசத்தனாய் மயங்கினாலும் அப்படிமயங்காமற் றிடச்சித்தனாய்த்தெளிந்தாலும் இன்பமானதெய்தி யின்புற்றாலுந் துன்பமானது துன்னித் துன்புற்றாலும் ஒருவர் முன்னின்று புகழ்ந்தாலும் அப்படி புகழ்ந்தவர் பின்பிகழ்ந்தாலும் முன்னாலமைத்த விவ்வுடம்பே பிறந்தழிந்து போனாலும் யான்மறந்தொழிந்திருக்க வல்லவனாவேனோ நான்கு வேதமும் முறையிடப்பட்ட திருவரங்கேசருடைய நான்கு புயங்களையும் புரிநூலானது துவண்டுபுரளாநின்ற பொலிவினையுடைய மார்பினையுஞ் செம்பவளம்போன்ற திருவாயிற்சிறந்தமுத்தினையொத்தமுறுவலையுஞ்சுருண்டு கிருமையற்றசோதியானகெசத்தையுஞ் செவ்விதாய் நீண்ட திருமுடியையும் வண்மையுடனே துய்யதாய்ச் சிவந்த திருவடித்தாமரையையும் எக்காலத்தும் மறவேன். எ-று. 28

நேரிசைவெண்பா.

சேவடியான்மூவடிமண்டென்னரங்கத்தம்மானீ
மாவலிபால்வாங்கியநாண்மண்ணுலகோ-மூவுலகும்
வீசுங்காலோவலியவெவ்வினையேனெஞ்சமோ
பேசுங்காலேதோபெரிது.

இ-ள். தெற்குத்திசைக்குத் திருப்பதியாகிய திருவரங்கத்திலுள்ள சுவாமி அடியேன் விண்ணப்பங் கேட்டருள்வாயாகவேண்டும். தேவரீர் மாவலியினிடத்திலே வாமனவடிவாய்வந் திரந்து உமது சேவடியினாலே மூவடிமண்கேட்டு வாங்கினவந்நாளிலே பூமியந்தர சுவர்க்கமானமூவுலகமும் வீசி விளங்கியபாதமோ பெரிதானது அல்லவென்று இவ்வினையினுடைய சிறிதான சிந்தைதானே பெரியதானதென்று பேசுமளவில் இம்மூவுலகுமிருக்குமிடம் விசாலமன்றி நீண்ட திருவடியான தென்சிந்தையிலடங்கி நீங்காமல் நிறைந்திருக்கையால் என்னெஞ்சமேபெரியது. எ-று. 29

நாரைவிடுதூது - கட்டளைக்கலித்துறை.

பெருவரங்கேசவனல்லாதருள்செயும்பேரிலவே
யொருவரங்கேசற்றுமோதாரென்காதலையோடியெங்குங்
கருவரங்கேசலிக்கத்திரிவோர்க்குக்கருணைசெய்யுந்
திருவரங்கேசற்குநீசொல்லல்வேண்டுஞ்செழுங்குருகே.

இ-ள். எனக்குப் பெரிதாகிய வரந்தந்தாள்கைக்குக் கேசவனல்லாதபேரில்லை என்காதலை யுன்னைவிடவொருவருமவர்க்குச் சற்றாகிலுந்தெரியப்படச் சொல்வாருமில்லை ஆகையாலே வீணாகக்கருவாங்காகிய கெர்ப்பக்கிரகங்கடோறும் பிறந்துமிறந்து முழலப்பட்ட திருவரங்கேசருக்கு நீயேபோய் என்துபரமெல்லாஞ் சொல்லவேணுஞ் செழுமைபொருந்திய குருகாகியபுள்ளே. எ-று. 30

இரங்கல்-தழிசை.

குருகுறங்குகானலேகருநிறங்கொள்பானலே
கொடியிருண்டஞாழலேநெடியகண்டநீழலே
பொருள்தரங்கவேலையேநிருதரங்கமாலையே
போதயின்றகம்புளேயேதையின்றியம்புகேன்
திருவரங்கரிணையிலாவொருபுயங்கவணையிலே
திகழ்வலக்கைகிழதாமுகிழ்மலர்க்கண்வளர்வதோர்
கருணைநம்புவதனமும்பருணவிம்பவதாமும்
காவிகொண்டமேனியுங்காவிகொண்டுபோனவே.

இ-ள். குருகாகிய பக்ஷிசாலஞ் சஞ்சரித்துறங்காநின்ற கானலாகிய கடற்கரையே! கரியநிறங்கொண்ட

பானலாகிய கருங்குவளேயே! கொடியிருண்ட ஞாழலாகிய தருவே! நெடியதாய் நிழலை நிழற்றுநின்ற தாழையே! பொருதப்பட்ட தரங்கமாகிய அலேகளேயுடையசமுத்திரமே! நிருதராகிய விராக்கதருடைய நிறம்போன்ற மாலேயாகிய அந்தியே! போதாகிய பூத்தாதிகளேப்பொசிக்கப்பட்ட கம்புளாகிய சம்பங்கோழியே! உங்களுடனே யிப்போ யான் எதையென்றெடுத்துச் சொல்லப்போகிறேன் திருவரங்கருடைய வினேயில்லாத வொருபுயங்கமாகிய பாம்பணேயிலேதிகழ்ந்து பிரகாசிக்கும் வலக்கையைத், திருமுடிக்கீழே கொடுங்கையணேயாகக் கொடுத்து முகளிதமாகிய மலர்க்கண்வளரா நின்ற ஒருவொப்பற்ற கருணேவெள்ளங்குடிகொண்ட முகாம்புயமுஞ்சிவந்த ஆதொண்டைப் பழத்தையொத்த வதரமுங் காவியாகிய கருங்குவளேப்பூவையொத்த திருமேனியுமாகிய இவ்வவயவங்கடோறு முண்டான அழகுகளெல்லாங்கூடி யென்னுயிராகிய பிராணனேக் கொள்ளேகொண்டு போயிற்று.()

பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

போனகம்பதினலுபுவனந்திருப்பள்ளி
பொறியரவணேப்பாற்கடல்
பூமடந்தையுநிலமடைந்தையுந்தேவியர்
புராதனமறைக்குமெட்டா
வானகம்பேரின்பமுடன்வீற்றிருக்குமிடம்
வாகனம்வயினதேயன்
மலர்வந்தநான்முகன் றிருமைந்தன்வன்மைந்தன்
மதிசூடிவாசவன்முதல்
தேனகுந்தொடைமௌலிமுப்பத்துமுக்கோடி
தேவருனதேவல்செய்வோர்
திங்களும்பரிதியுஞ்சங்கமுந்திகிரியுந்
திரிவனவுநிற்பனவுமாம்
ஏனமன் னுயிர்முழுதும்விளையாட நீவகுத்
திட்டபலமாயையதனல்
எழிலரங்கந்துயிலுமெம்பிரானின்பெருமை
யாவரேவாழ்த்துவாரே.

இ-ள். அழகியதிருவரங்கத்திலே சேஷசயனத்திற்றிருக்கண்வளரா நின்றசுவாமி தேவரீருக்குப் போனகமாகிய பொசிப்பாவது பதினலுபுவனமும், அதுவுமன்றித்

தேவரீருக்கழகிய பள்ளியறையாவது பொறியரவென்னும் பாம்பாகிய வணையையுடைய திருப்பாற்கடல், அதுவுமன்றித் தேவரீருக்குத் தேவிமாராகிறவர் ஸ்ரீதேவியும் பூதேவியும், அதுவுமன்றித் தேவரீருக்கு வின்பத்தோடுங்கூடிப்பரவாசுதேவர் எழுந்தருளியிருக்குமிடமாவது புராதனமாகிய நான்குவேதத்துக்கு மெட்டாத வானுலோகம், அதுவுமன்றித் தேவரீருக்குவாகனமானது வயிணதேவனாகிய கருடன், அதுவுமன்றித் தேவரீருக்கு வந்து யேவற்றொழில் செய்யப்பட்டவர்கள் உனது உந்திக்கமலத்திற்பிறந்த பிரமதேவனாகிய பிள்ளைக்குப் பிள்ளையாகிய பிறையைச்சூடினவன் தேவேந்திரன் முதலாகிய கற்பகப்பூத்தேன் றுளிக்காநின்ற பூமாலைபொருந்திய பொன்முடிகவித்த மூப்பத்துமுக்கோடிதேவர்கள், அதுவுமன்றித் தேவரீருக்கு ஆயுதமாவது சந்திரசூரியராகிய சங்குசக்கராயுதம், அதுவுமன்றித் தேவரீருக்குவிளையாடலானது பலபலமாயையாக வகுக்கப்பட்ட தத்துவனவும் ஊர்வனவும் தவழ்வனவும் நிற்பனவு-முதலாகிய சகலஜீவராசிகள் ஆகையால் தேவரீருடைய பெருமையை யாவரால றிந்து புகழப்படும். எ-று. 32

இரக்கல்-இதுவுமது.

வாழுமவுலித்துழாய்மணமு
மகரக்குழைதோய்விழியருளு
மலர்ந்தபவளத்திருநகையு
மார்பிலணிந்தமணிச்சுடருந்
தாழுமுளரித்திருநாபித்
தடத்துளடங்குமனைத்துயிருஞ்
சரணக்கமலத்துமைகேள்வன்
சடையிற்புனலுங்காணேனல்
ஆழமுடையகருங்கடலி
னகடுகிழியச்சுழித்தோடி
அலைக்குங்குடகாவிரிநாப்ப
ணேணவாபரவிற்றுயிலமுதை
ஏழுபிறப்பிலடியவரை
யெழுதாப்பெரியபெருமானை
எழுதவரியபெருமானென்
றெண்ணுதெழுதியிருந்தேனே.

இ-ள். திவ்வியமங்கள சுரூபமாய்ச் சிறந்த திருமுடியிற்சூடிய துளவமாலிகையின் சுகந்தத்தையுந் திருமகரக்குழைவிளங்கிய திருச்செவியிற்சென்று சேராநின்ற கடாக்ஷவீட்சணத்திற் பெறுங் கருணை வெள்ளத்தையுஞ் செம்பவளம்போன்ற திருவரங்கமலராற்சிறந்த சிறுநகையையுந் திருமார்பிலணிந்த கவுஸ்துவாபரண மணியின் சோதியையுந் தாழ்ந்துகுழிந்த தாமரையாகிய நாபித்தடத்துக்குள்ளா யடங்கிநின்ற சர்வ சீவராசியையுஞ் சரணாரவிந்தத்தில் உமாபதியினுடையசடைக்கங்கையும் நான் காணேன் ஆகையாலாழமுண்டான கருங்கடலினுடைய அகடாகிய வயிறுகிழியச் சுழித்துக்கொண்டோங்கி அலைக்காநின்ற குடகாவேரிக்கு நடுவே ஐந்துவாயையுடைய பாம்பாகிய அணையிலேயருட்கண்வளர்ந்தருளி யமுதம்போன்றவரைத் தமக்கு அடியாரானவர்களுடைய எழுபிறவித் தொகையையுமியமன்கணக்கி லெழுதாத பெரிய பெருமாளை யெழுதற்கரிய வெழிலுடையபெருமாளென்று மெண்ணாமல் என்பேதையாகியபுத்தியினா லிப்படத்திலென்னென்று துணிந்துவெழுதியிருந்தேன். எ-று.

இதுவுமது-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இருங்குங்குமத்தோளரங்கேசர்முன்னாள்
இலங்காபுரங்காவலன்காலினால்வீழ்
கருங்குன்றுபோன்மண்முகங்குத்திவீழக்
கண்டாரெனக்கின்றுதண்டாரளித்தால்
மருங்கெங்கும்வம்போதுவார்வாயடங்கும்
வாடைக்குநிலமங்கையாடைக்குநேர்கேன்
நெருங்குந்தனஞ்சந்தனம்பூசலாகும்
நீளாதிராமையன்மீளாதிராதே.

இ-ள். பெரியதாகிய குங்குமங்களைக் கொட்டாநின்ற தோளிணையுடைய வரங்கநாயகர் முற்காலத்தில் இலங்காபுரிக்குக் காவலனாகிய இராவணனைக் காலாகிய சண்டமாருதத்தினாற் கவர்ந்துவிழாநின்ற கருமலைபோல மண்ணிலே முகங்குத்தித் தலைகீழாய் விழும்படிக்குச்செய்தவர் இப்போதெனக்குத் தண்மையையுடைய மாலையைத் தந்தாராகில் இவ்விடத்தி லெங்கெங்கு மலர்த்தூற்றுவாருடைய வாயலராகாமலடங்கும். அதுவன்றியும் வாடை கிய காற்றுக்கும் நிலமங்கையாடையாகிய கடலுக்கும்

யான் நோக்கத் தக்கதில்லை. இழையும் நுழையப்படாத நெருக்குதலையுடைய தனத்திலே நற்சந்தனக்குழம்பைத் தடவலாகும் இரவும் நீட்டியா தென்னுடைசைநோயும் நீங்கும். எ-று. 34

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தேடுகின்றனை யைம்பொறி களுக்கிரை தேடியுங் கிடையாமல், வாடுகின்றனை வீடுசென் றென்றினி மருவுவை மடநெஞ்சே, ஆடுகின்றிலை யழுகிலை தொழுகிலை யரங்கனைக் கரங்கூப்பிப், பாடுகின்றிலை நினைகிலை பதின்மர்தம் பாடலின் படியாயே.

இ-ள். அல்லும்பகலும் அவமேதிரிந்தைம்பொறியாகிய மெய் - வாய் - கண் - மூக்குச் - செவியென்பதற்குச் சத்த - பரிச - ரூப - ரசகந்தமாகிய பொசிப்புகளைத் தேடாநின்றாய், அப்படிதேடியுங்கிடையாமையாய் வாடாநின்றாயாகில் நமக்கு மோக்ஷமாகிய வீட்டினிடத்திலே இனியென்றைக்குச் சேரப்போறாய் மடமையையுடைய நெஞ்சமே அரங்கநாயகனை இரண்டுகைகளையுங் குவித்தும் பாடுகிறாயில்லை ஆனந்தமாக நின்றாடுகிறாயில்லை திருவடிகளிற்றெண்டனாய் விழுகிறாயில்லை நினைந்துநினைந்து பரவசமாகிறாயில்லை பதின்மராகிய ஆழ்வாராதியர் பாடின பாடலையும்படிக்கிறாயில்லை. எ-று. 35

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஆயினைமனையைச்சேயினைப்பிதாவை
அனத்தினைத்தனத்தினைவிரும்பும்
பேயினைமறந்துநோயினைமூப்பைப்
பிறப்பினையிறப்பினைத்துடைப்பீர்
ஆயனைமுளரிவாயனையெங்கள்
அமலனைக்கமலனைப்பயந்த
தாயனைநெடியமாயனைவடபாற்
றரங்கனையரங்கனைத்தொழுமே.

இ-ள். மாதாபிதாவையும், பெண்டீர்பிள்ளையையும், அன்னத்தையும், சொர்னத்தையும், மற்றுமுள்ள பண்டுபதார்த்தங்களையும் பொய்யென்று நினையாமல் மெய்யொன்றுவிரும்பும் பேயாகியபித்தை மறந்து நோயையும் மூப்பையும் பிறப்பையு மிறப்பையுந் துடைத்து அடியினைக்

கருதுவீர்கள். எப்படியென்றால் ஆயனாகிய கோபாலனை மலர்ந்த செந்தாமரையையொத்த வாயையுடையவனை எங்கள் மும்மலத்தையு மொழிக்கப்பட்ட வமலனானவ னைக் கமலனாகிய பிரமதேவனைப் பெற்ற தாயானவனை நெடிதாகிய மாயனை வடபத்திரத்திலும் பாற்கடலிலும் பள்ளிகொண்டவனை அரங்கநாயகனை அடைந்து தொழுதுகொள்ளுங்கள். எ-று. 36

மடக்குக்கட்டளை மண்டலக்கலிப்பா.

தொழப்பெறுதந்தவாரணத்தந்தமே
தொட்டிறுத்ததும்வாரணத்தந்தமே
வழுத்துதாண்முன்புவனங்கடந்ததே
மலர்ந்தவுந்திபுவனங்கடந்ததே
ஒழித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
ஒசித்ததுங்குழைச்சங்கரன்சாபமே
அழித்ததும்பொருதானவராங்கமே
அரிதனூரினிதானவரங்கமே.

இ-ள். அரங்கேசருடைய பெருமையை இத்தன் மைத்தென்றறிந்து தொழமாட்டாததுவும் அழகிய வே தாந்தமே அவர் தங்கையினாலே தொட்டு முறித்ததுவும் யானைக் கொம்பையே அவர் முன்புசீதைப் பிராட்டியாரு டனே வனங்களைக் கடந்து சென்றதுவும் தொண்டர் களாயுள்ளோர் யாருந்துதிக்க திருவடியே அதுவுமன்றி இப்புவனங்களை யெல்லாம் பெற்றதுவும் அவருடைய மலர்ந்த நாபிக்கமலமே அதுவுமன்றி யொருவராலு மொழிதற்கரியதை அவரொழித்ததுவுந் துயரமுற்ற சங்கரனுடைய சாபத்தையே மற்றும் யாவராலும் வளைக் கப்படாதத்தை யவர்களைத் தொடித்ததுவுங் குழையாகச் சங்கைத்தரித்த அரனுடைய வில்லையே மற்றுமவனழிக் கிறதும்பொருதப்பட்ட அசுராதியருடைய அங்கத்தை யே அவனுக்கிருப்பிடமாகத் தேவலோகத்திலு மினிதா னது அரங்கமாநகரமே. எ-று. 37

நேரிசை ஆசிரியப்பா - உயிர்வருக்கமோனை.

அரங்கமாளிகைக்கருங்கடல்வண்ணனை
ஆலிமாமுகிலைவாலிகாலனை
இந்தளூருறையெந்தைபெம்மானை
ஈசனான்முகன்வாசவன்றலைவனை

உள்ளுவாருள்ளத்துள்ளுறைசோதியை
ஊரகநின்றருணீரகத்தடிகளை
எவ்வுண்மாயனைத்தெய்வநாயகனை
ஏர்மலிசிகரத்துநீர்மலையாதியை
ஐவாயரவிலறிதுயிலமலனை
ஒருகான்மொழியினுமொழிகுவைநெஞ்சே
ஓதநீர்ஞாலத்துழலும்
ஔவியப்பிறப்பிலழுந்திவாடுவதே.

இ-ள். அரங்கமாகிய மாளிகையினிடத்தில்வாழுங் கரியகடலையொத்த திருமேனியின் வண்ணத்தையுடையவனை, பாவினிடத்திலே மாவாகிய மகாலட்சுமிக்கும் முதன்மையானவனை, வாலிக்குவலியகாலனானவனைத், திருவிந்தளூரிலுறையப்பட்ட வெந்தையாகிய சுவாமியை, ஈசனென்றும் நான்முகனென்றும் வாசவனென்றுஞ் சொல்லப்பட்ட இவர்களுக்குத் தலைவனானவனை, ஓயாமல் நினைப்போர்களுடைய நெஞ்சத்துள்ளே நிறைந்த ஜோதியானவனை, திருவூரகத்திலே நின்றருளிய திரிலோகத்தடிகளாகிய தேவனைத், திருவெவ்வளூரில் வீரராகவனென்னுமாயவனை, திருவயிந்திரபுரத்திற் றெய்வநாயகனானவனை, அழகின்மிகுந்த சிகரங்களையுடைய நீர்மலையினிடத்திலெனக்கெந்தையா யிருக்கப்பட்டவனை, ஐந்தலையையுடையவராவணையிலறிதுயிலாக வமர்ந்தருளிய அமலனானவனை, நெஞ்சமே! ஒருதரம் அவனது துதியைச் சொன்னாயேயாகிலு மொழித்துவிடலாம் கடல்சூழ்ந்தவுலகத்திலே யுலாவி நின்றுழலு மௌவியமென்னும் பொய்மையாகிய பிறவிசாகரத்திலழுந்தி வரப்பட்ட அனுபவமெல்லாம். எ-று. 38

இரங்கல்-தாழிசை.

வாடியோடவனசமன்னவிருகண்வெள்ளமருவிபோல்
மருவியோடமதனன்வாளியுருவியோடவாடையூ
டாடியோடவன்றிலோசைசெவியிலோடவண்டுழாய்
ஆசையோடுமெங்கள்பேதையாவியோடனீதியேர்
மோடியோடவங்கிவெப்புமங்கியோடவைங்கரன்
முடுகியோடமுருகனோடுமுக்கணீசன்மக்களைத்
தேடியோடவாணனுயிரம்புயங்கள்குருதிநீர்
சிந்தியோடநேமிதொட்டதிருவரங்கராசரே.

இ-ள். மோடியாகிய மூதணங்கு தோற்றோடவும், அங்கியாகியநெருப்பினுடையவெப்பமு மங்கியோடவும், ஐந்துகரமுடைய யானைமுகவன் முடுகியோடவும், அவன்தம்பியாகிய முருகனவன்பின்பு கடுகியோடவும், மூன்றுகண்ணினையுடைய ஈசனுனவன் மக்களைத்தேடியோடவும், வாணாசுரனுடைய ஆயிரம் புயங்களினுமிருந்து குருதிநீர் வெள்ளமானது குதித்தோடவும், சக்ராயுதத்தைவிடுத்தருளிய திருவரங்கராசரே! எங்கள் பேதத்தன்மையை யுடையவளுடைய கமலம்போன்ற விருகண்மலரும் வாடிப்போகவும், மன்மதனெய்யப்பட்ட வைங்கணையும்பட் டுருவியோடவும், வாடையானதுவந் திழைந்தோடவும், அன்றிலாகிய பட்சியினுசையினுல் இருசெவியிலும் நுழைந்தோடவும், வண்மையுடைய உமது துளபமாலைமேல்வைத்த ஆசையுடனேகூட அவளாவிகூட்டிவிராது நீங்கியோடவும் நீதியோ சொல்லும். 39

கலிச்சந்த விருத்தம்.

சருகருந்திஐம்பொறிவருந்தருந்தவர்களண்டர்குஞ்
சரமுகன்குகன்
பரிதிசந்திரன்சிவனயன்புரந்தரனிரந்தரம்
பரவுமெந்தையூர்
குருகைதஞ்சைதென்கணபுரங்குறுங்குடிகுடந்தைவண்
டுவரையிந்தளூர்
திருவைகுந்தமஞ்சனசிலம்பயிந்திரபுரஞ்செழுந்
திருவரங்கமே.

இ-ள். சருகுமுதலாகிய பொசிப்புகளைப் பொசித்துவைந்துபொறிகளும் வருந்தப்பட்ட அரியதபோதனர்கள், தேவர்கள், ஆனைமுகவன், ஆறுமுகவன், சந்திரன், சூரியன், சிவன், அயன், தேவேந்திரன் முதலானபேர்கள் சதாகாலமும்பாவிப் பணியுமெந்தையாகிய எம்பெருமானுக்கு இருப்பிடமாயெவூராவது திருக்குருவை, திருத்தஞ்சை, திருக்கண்ணபுரம், திருக்குறுங்குடி, திருக்குடந்தை, திருத்துவரை, திருவிந்தளூர், திருவைகுந்தம், திருநீலகிரி, திருவயிந்திரபுரம், செழிப்பினையுடைய திருவரங்கமுதலான மற்றுமுள்ள தலங்களுமாம். எ-று. 40

மடக்குக்கொச்சகக்கலிப்பா.

திருவரங்கந்திருக்கோயில்சேர்ந்ததுமதுதிருக்கோயில்
தருவரென் றும்வைகுந்தத்தடங்கொளிசேர்வைகுந்தம் [ர
ஒருமருங்கினத்துடையா ரொழிந்தொர்சனனந்துடையா
மருவமறந்திருப்பீரேவணங்கமறந்திருப்பீரே.

இ-ள். திருவரங்கமாகிய வழகியகோயிலைச்சென்று சேர்ந்தது உங்கள்திருக்காகிய தீவினைகளெல்லாந்தீர்ந்து தேயாலல் தருவர் எக்காலமுந் தாமிருந்தருளிய தம்மு டைய வொளிருமொளி சேர்ந்த வைகுந்தத்திலிருக்கும் பதவியை. ஒருவருமருங்காகிய இடதுகையிலேந்திய சங் கத்தை யுடையவரேயன்றி மற்றொருவருங்கள் செனனத் தைப் போக்கமாட்டார்கள். ஆகையாலவருடைய திரு வடித்தாமரையை மருவுதற்குப்பொருந்தாமற் போகப்ப ட்ட மாறுபாடாகிய உங்கள்மனதைத் திருப்புங்கள் வண ங்குகிறதற்கு மறந்திருக்கப்பட்டவர்களே. எ-று. 41

சித்து-கட்டளைக்கலிப்பா.

திருப்பொற்பாவைக்குக்கஞ்சம்பொன்னுக்கிய
சித்தரேஞ்சுத்தக்காயாமலரென
உருப்பொற்பான திருவரங்கேசனர்
ஊரகத்துநின்றூர்சென்றிறைஞ்சினோம்
இருப்புப்பாடகங்காட்டினர்யாமவர்க்
கிரும்பைபாடகமாக்கினமீயத்தை
நருக்கிவெள்ளியதாகவுருக்குவோம்
தமதுவித்தைக்கமுதேயருமையே.

இ-ள். திருப்பொற்பாவையாகிய சீதேவிக்குக் கஞ் சமாகிய வெண்கலத்தைப் பொன்னுக்கிய சித்தர் நாம் மைத்திருண்ட காயாம்பூவையொத்த வடிவழகிய திருவ ரங்கேசரானவர் திருவூரகமாகியவிடத்திலிருக்கும்போது சென்றிறைஞ்சினோம். அப்போதவரிருப்புப்பாடகங்காட் டினர் நாமவருக்கு அந்தவிரும்பை யாடகமாகிய பொன் னுகச்செய்தோம். அதுவுமன்றி ஈயத்தை நறுக்கி வெள் ளியதாகவுருக்குவோம் இதுவெல்லாமருமையல்ல வெம துவித்தைக்கு அமுதமாத்திரமே யருமை. எ-று. (இன் னையிதற்கேயுரை இப்பொருளன்றியு மிதனுள்ளுரையெ ன்னேவென்னிற் சீதேவியிருப்பது பொற்றுயுரையாத

லால் கஞ்சமாகியதாமரையைப் பொன்னாக்கினேனென்றார். இருப்புப்பாடகங்காட்டினானென்பது தாமிருக்குமிருப்பிடந் திருப்பாடகமாகிய தலமென்று அறிவித்தது, இரும்பைபாடகமாக்கினமென்பது பெரியபாம்பின்படத்தையவருக்கு நாடகசாலையாக்கினமென்றது. ஈயத்தை நறுக்கி வெள்ளியதாக வுருக்குவோமென்பது ஈயத்தை யுருக்கி யூற்றும்போது வெள்ளியதா யோடுமென்பது கருத்து.) 42

இதுவுமது-கட்டளைக்கலித்துறை.

அரும்பித்தளையவிழ்நாண்மாலைமார்பனரங்கனெங்கள்
பெரும்பித்தளையும்பிறப்பறுத்தாண்டபிரான்சித்தரேம்
தரும்பித்தளையுந்தராவும்பொன்னாக்கித்தருவெமப்பா
திரும்பித்தளையினுநெய்பாலமுதினுஞ்சிந்தனையே.

இ-ள். அரும்பானதரும்பி முறுக்கவிழ்ந்து புஷ்பிக்கும் பூமாலையையணிந்த மார்பையுடையவர் அரங்கமாகிய நகரையுடைய பெரிதாகிய பித்தையளைந்து குழம்பும்பிறப்பை யொழித்தாண்டருளிய பிரானை அரங்கநாயகருடைய திருவடிக்கரிதாகிய சித்தர்நாம் நீங்கள் தரப்பட்ட பித்தளையையுந் தராவையும் பொன்னாக்கித் தருவோம் அப்பாலென் சிந்தையானதிப்போ திரும்பிற்று. வெண்ணெயிலேயும் நெய்யிலேயும் பாலிலேயும் விருப்பமாய்ப் பொசிக்கவேண்டும். எ-று. (இதற்கு இன்னமுமொன்றுண்டு, தரும்பித்தளையுந்தராவும் பொன்னாக்கியென்பது தரும்பிமறித்து அணைந்து வளையின்முட்டும்அராபாம்புக்கு அரியென்றுபேர், பொன்னுக்கு மரியென்றுபேராகையால் அப்பொன்னைப் பொன்னாக்குகின்றேனென்றார்.) 43

நேரிசை வெண்பா.

சிந்திக்கத்தித்திக்குஞ்செவ்வாய்துவர்த்துப்பாம்
புந்திக்குளேயின்புளிமேவு-நந்தம்
கருவரங்கங்கைத்தழலுங்காவிரியினூடே
திருவரங்கத்தேவளருந்தேன்.

இ-ள். காவேரியினிடத்திலே திருவரங்கத்திற் கண்வளராநின் றின்பத்தைச் செய்கின்றமையால் தேனையொத்திருக்கின்ற அரங்கநாயகராகிய தேனையுண்ண

வென்று சிந்தையினாற் சிந்திக்குமாத்திரத்திலேதானே பிறவஞ்சமாகிய வாழ்க்கையில் மற்றொருபொசிப்பினாலிர திக்கின்ற சிவந்தவாயானது அவர்த்துப்பாய்விடும் இதயத்திலேயிடைவிடாத ஆனந்தமாகிய பேரின்பமுடைத் தாயிருக்கு மன்றியும் நம்முடைய கருவரங்கமாகிய கருப் பைக் கைத்துக் கனற்றுநிற்கும். எ-று. 44

கட்டளைக்கலித்துறை.

தேனந்துசோலையரங்கேசர்சேவடிமேல்விசயன்
தானந்தநாளையிற்சாத்தியமாலையுந்தாள்விளக்கும் [ற
வானந்தருங்கங்கைநன்னீருஞ் சென்னியில்வைக்கப்பெற்
ஆனந்தந்தானல்லவோமுக்கணான்மன்றுளாடுவதே.

இ-ள். வண்டினங்கள் தாவாநின்ற பூங்காவனஞ் சூழ்ந்த அரங்கநாயகருடைய திருவடியில் அர்ச்சுனனானவன் முற்காலத்திலர்ச்சித்த மாலையும் அடியிணைவிளக்கிய வரனிடத்திலேவருங் கங்கையாகிய நன்னீரையுஞ் சிரசிலே வைக்கப்பெற்ற ஆனந்தமாகிய மகிழ்ச்சியினாலன்றோ மூன்றுகண்ணினையுடையவன் மன்றினிடத்திலே நடமாடினது. எ-று. 45

இரங்கல்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஆடும்படநாகணைமேலணையு
மமலன்கமலத்தவனுஞ்சிவனும்
நாடுந்திருமாறுயில்கோயிலின்வாய்
நறைவார்பொழிலூடுறைவாரளகக்
காடுங்குழையைச்சாடுங்குவளைக்
கண்ணுங்குதலைப்பண்ணுங்கரியின்
கோடுந்தரளத்தோடும்புருவக்
கோதண்டமுமேமுதண்டமுமே.

இ-ள். எடுத்தாடும் படத்தினையுடைய பாம்பணையிற் பள்ளிகொள்ளும் பரமபுருஷோத்தமரானவர் உந்திக்கமலத் துதித்த வயனும் அரனு மாராய்ந்தறிதற்கரிய திருமாலானவர் திருக்கண்வளருந் திருவரங்கத்தினிடத்திலே நறுநாற்றங்கமழும் நந்தவனத்திலே நண்ணுந் தலைவியாருடைய அளகாடவியும், காதிலணிந்த குழையைவந்தலைக்குங் குவளைமலரையொத்த கண்ணும், குதலையாகிய பண்ணின்மொழியும், யானைக்கொம்பையொ

த்து அழகிய கொங்கையும், முத்தினாலேயமைத்த தோ
டும், புருவமாகிய வில்லுமாகவே தோன்றா நின்றது மூத
ண்டகோளமுழுதும். எ-று. 46

கைக்கிளை-எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்.

அண்டமுழுதுண்டவருமிழ்ந்தவரிடந்தவ
ரளந்தவர்வளர்ந்தருளுமா
சண்டபணவைந்தலையனந்தசயனந்திகழ்
தருந்திருவரங்கர்வரைமேல்
கண்டதொருகொம்பதிலிரண்டுமகரங்களொரு
கஞ்சமிருவெஞ்சிலைமணங் [ண்டையிரு
கொண்டதொருகொண்டலிருகெண்டையொருதொ
கும்பமொருசெம்பணிலமே.

இ-ள். அண்டபகிரண்டங்களெல்லாம் போனகமாகவுண்டுமிழ்ந்து மிடந்து மளந்தவர். அதுவன்றியும், நீண்டுவளரும் பெரிய கொடிதாகிய தடங்களைப் பொருந்திய வைந்தலையையுடைய வனந்தசயனத்திலே திகழ்ந்தருளிய திருவரங்கேசருடைய வரையினிடத்திலே என் கண்ணினாற் காணத்தக்க இளவஞ்சிக் கொம்பொன்று உண்டு அதிலே இரண்டுமகரங்களும், ஒருதாமரையும், இரண்டுவில்லும், மணம்பொருந்திய வொருமேகமும், இரண்டு சேற்கெண்டையும், ஒரு ஆதொண்டைப்பழமும், இரண்டுகுடமும், ஒரு சங்குமுள்ளது. எ-று. (இன்னங்கேளென்னில் இளவஞ்சிக்கொம்பிடையாகவும், மகரக்குழை காதாகவும், தாமரை முகமாகவும், வில் புருவமாகவும், மேகம் அளகமாகவும், மீனம் விழியாகவும், ஆதொண்டைப்பழம் வாயாகவும், குடங் கொங்கையாகவும், சங்கங் கழுத்தாகவுங்கொண்டு தலைவன் தலைவியை வியந்துரைத்தது.) 47

இரங்கல்-தாழிசை.

செம்பொன்னரங்கத் தரங்க நீர்ச் சீதள சந்திர வாவிசூழ், கம்புளுடன்பயி னாரைகாள் காதலையென்சொலியாறுவேன், வெம்பனி வந்தது வந்தபின் வேனிலும் வந்தது வேனில்போய்ப், பைம்புயல் வந்தது சென்றனம் பாதகர் வந்திலர் காணுமே,

இ-ள். செம்பொன்னிறத்செய்த வரங்கத்தினிடத்திலே யலைகள்பொருந்திய நீரளாவிய சீதளச்சந்திர வாவியாகிய சந்திரபுஷ்கரணியைச் சூழப்பட்ட கம்புளாகிய சம்பங்கோழியுடனேகூடத் துயிலாநின்ற நாரைகளே! யான்கொண்ட காதலை யென்னென்றுசொல்லி யாற்றிக்கொள்ளப் போறேன்! வெவ்விதாகிய பனிக்காலமும் வந்தது. பின்பு கொடிதாகிய வேனிற்காலமும்வந்தது. பிறகு மழைக்காலமும்வந்தது. இரக்கமின்றி நம்மைவிட்டுப் பிரிந்துபோன பாதகர் இன்னம் வந்திலர்காணும்.()

சம்பிரதம்-பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

காணுதபுதுமைபலகாட்டுவென்கட்செவிக
ளெட்டையுமெடுத்தாட்டுவன்
கடல்பருகுவன்பெரியகனகவரையைச்சிறிய
கடுகினிலடைத்துவைப்பன்

வீணுரவாரமுதண்டமுறவிளைவிப்ப
னிரவுபகன்மாருட்டுவென் [வை
விண்ணையு மறைப்பனெழு மண்ணையு மெடுப்பனி
விளையாடும்வித்தையென்ருல்

நீணுகணைப்பள்ளியிற்றிருவரங்கத்து
நெடிதாழிதுயிலும்பிரான்
நெற்றிக்கணனவனை நான்முகனைவாசவனை
நிமிருமிருசுடரைமுதலாச்

சேணுடர்யாவரையுமடிமைகொண்டவரவர்
சிரத்திற்பொறித்துவிட்ட
திருச்சக்கரப்பொறியிலாதவொருகடவுளைத்
தேடியினிமுன்விடுவனே.

இ-ள். காணப்படாத வதிசயங்களையெல்லாம் காட்டுவேன், அட்டமாநாகங்களையு மெடுத்தாட்டுவேன், சத்தசாகரங்களையும் பானம்பண்ணுவேன், பெரிதாகிய மகமேருகிரியைச் சிறிதாகிய கடுகிலேயடைத்துவைப்பேன், வீணுரவாரமாக மூதண்டகோளங்களினு முண்டாக்குவேன், இரவு பகலாகவும் பகலிரவாகவு மாருடுவேன், ஆகாயத்தைமறைப்பேன், ஏழுலகங்களையுமெடுப்பேன், இதுவெல்லாம் விளையாடும் வித்தையல்ல. நீண்டநாகணையிற் றிருவரங்கத்திலே நெடிதான வூழிகாலமு மறி

துயிலமர்ந்த எம்பெருமானுனவர் நெற்றியிற் கண்ணுண்டான திரிநேத்திரனைத் தேவேந்திரனைச் சதுமுகப்பிர்மாவைச் சந்திரசூரியர் முதலான விண்ணுலகிலுள்ளவர்கள் யாவரையும் அடிமைகொண்டு அவரவர் சிரங்களிலே எழுதிவிட்ட அழகிய சக்கரப்பொறியில்லாதவராய் இருக்கப்பட்ட ஒரு கடவுளைத் தேடிக்கொண்டு வந்து இனி முன்னேவிடுவேன். எ-று. (என்னவே, சக்கரப்பொறியில்லாத கடவுள் எவ்வுலகினுமில்லையாதலாற் றேடி இனி முன்விடுவேனென்று அருமை அறிவித்ததெனக்கொள்க.) 49

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

முன்னமேழ்புரவியாரிரவிகாய்வெயிலினுன்
முத்தரும்பியகலாமுழுமதித்திருமுகத்
தன்னமேயின்னமோர்காவதம்போதுமேல்
அகலுமிப்பாலையப்பாலரைக்காவதம்
என்னையாளுநடையவன்றுயிலராவமளியும்
இலகுபொற்கோயிலுமிந்துவின்பொய்கையும்
புன்னைவாய்நீழலும்புரிசையும்பதுகரப்
பூவிரித்துறையுமக்காவிரித்துறையுமே.

இ-ள். முன்னமே ஏழுகுதிரை கட்டப்பட்ட இரதமுடைய இரவியால் எரிக்கப்பட்ட வெய்யிலினாலே வேர்வையாகிய முத்தரும்பிய பூரணசந்திரோதயம்போன்ற அழகிய முகத்தினையுடைய அன்னத்தையொத்த நடையினையுடையவளே! இப்போது நாமிங்ஙனம் நின்று நடந்துபோகுதற்கு முன்னம் இன்னம் ஒருகாதவழி நடந்தளவில் அங்ஙனமழற்றுநின்ற பாலைவனமுண்டு அந்த பாலைவனத்துக்குமப்பால் அரைக்காவதமுண்டு அவ்விடத்திலே என்னையாளாகவுடைய அருட்கண்வளராநின்ற வனந்தனுகிய வமளியும் விளங்கப்பட்ட அழகின்மிக்க திருவரங்கமும், சந்திரபுஷ்கரணியும், புன்னாகவிருக்ஷநிழலும், சத்தப்பிரகாரமும், வண்டுகள் படியப்பட்ட புஷ்பங்கள் மாறாநின்ற பூங்காவனமும், அழகிய காவேரிதீர்த்தமும் காணக்கடவோம். அவ்வளவும் நீ மனந்தளராமல் வரவேண்டும். எ-று. 50

கட்டளைக்கலித்துறை.

துறைமதியாமலிக்கான்யாறு நீந்திச்சுரங்கடத்தல்
நிறைமதியாளர்க்கொழுக்கமன்றுநெடுமாலரங்கத்
திறைமதியாவருமாராவமிர்தன்னவிந்தநுதற்
குறைமதியாள்பொருட் டாற்கங்குல் வாரலெங் கொற்றவனே.

இ-ள். இது வழங்குந்துறை இது வழங்காத் துறையென்று மதியாமற் பெரிய கான்யாற்றை நீந்தி யரிய வழியைக் கடக்கின்றமை யுன்னைப்போல நிறைந்த வறிவுடைமையாளர்க்கொழுக்க முடைமையன்று. நெடு மாலாகிய திருவரங்கத்திலுறையப்பட்ட எம்பெருமானு னவர் முன்னே சமுத்திரந் தானப்பண்ணவந்து நிறைந்த வமுதத்தையொத்த இந்தக் குறைமதியாகிய பிறையையொத்த நெற்றியையுடையவள்பொருட்டா யிவ்விருளின்கண் வாராதொழிவாயாக வெம்முடைய தலைவனே! எ-று. 51

மறம்-அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கொற்றவன்றன் றிருமுகத்தைக்கொணர்ந்ததூதா
குறையுடலுக்கோமறவர்கொம்பைக்கேட்டாய்
அற்றவர்சேர்திருவரங்கம்பெருமாடோழன்
அவதரித்ததிருக்குலமென்றறியாய்போலும்
மற்றதுதான் றிருமுகமேயானலந்த
வாய்செவிகண்மூக்கெங்கேமன்னர்மன்னன்
பெற்றவிளவரசானலாலின்கொம்பைப்
பிறந்தகுலத்துக்கேற்கப்பேசுவாயே.

இ-ள். கொற்றவனாகிய வேந்தனுடைய திருமுகத்தைக்கொண்டுவந்த தூதனே! இந்தச் சிரமிழந்தமுண்டமாகி யங்ஙனந்தனித்துக்கிடந்த குறையுடலுக்கோ மறவராகிய வேடர்பெற்ற வஞ்சிக்கொம்பையொத்த எங்கள் பெண்ணைக்கேட்டாய்? ஆசாபாசங்களையுந்தவறிய தபோதனர்களனுகப்பட்ட திருவரங்கப்பெருமாள் தோழனுன குகனென வேடன் திருவவதாரஞ்செய்த திருக்குலமென்று அறிந்ததில்லையோ நீ கொண்டுவந்தது திருமுகமேயானல் மற்றுமிதனுடைய வுறுப்பாகிய மெய், வாய், கண், மூக்குச், செவியானதெங்கே போய்விட்டது! மன்னர்மன்னவனவன் பிறந்தகுல மரசனானல் அதற்கினமாகிய

ஆவின்கொம்மைப் பிறந்தகுலத்துக் கியற்கையாகப் பேசிப் பெண்கேட்டாய். எ-று. 52

இதுவுமது-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பேசவந்ததூதசெல்லரித்தவோலைசெல்லுமோ
பெருவரங்களருளரங்கர்பின்னைகேள்வர்தாளிலே
பாசம்வைத்தமறவர்பெண்ணைநேசம்வைத்துமுன்னமே
பட்டமன்னர்பட்டதெங்கள்பதிபுகுந்துபாரடா
வாசலுக்கிடும்படல்கவித்துவந்தகவிகைமா
மகுடகோடிதினையளக்கவைத்தகாலுநாழியும்
வீசுசாமரங்குடிற்றொடுத்தகற்றைசுற்றிலும்
வேலியிட்டதவர்களிட்டவில்லும்வாளும்வேலுமே.

இ-ள். பெண்பேசுதற்குவந்த தூதனே கேழ்ப்பாயாக! கறையானரித்த பனஞ்சருகு செல்லுமோ பெரிய வரங்களை அடியார்களுக்களிக்கவல்ல அரங்கநாயகராகிய இலக்குமிகாந்தருடைய திருவடிகளிலே யாதரவான மறவர்பெற்ற பெண்ணைவேண்டி நேசம்வைப்பதற்கு முன்னமே பட்டவர்த்தனராகிய இராஜாதி ராஜாக்கள் பட்டபாடுகளை எங்கள் பதியிலேபுகுந்து பார் போ, எங்கள்வாசலுக்கு மூடும்படல்களாக அவர்கவித்துவந்த குடைகளைச்செய்தோம், அதுவுமன்றி எங்களுக்குத் தினையளக்க மரக்காலும் நாழியுமாகவவர்களணியப்பட்ட பெருமைபெற்ற கிரீடங்களைச் செய்தோம், அதுவுமன்றி எங்கள் குடிசைக்கு விழற்கற்றையாக அவர்களுக்குவீசிவந்த வெண்சாமரைகளைச் செய்தோம், அதுவுமன்றி எங்கள்தோட்டத்துக்குச் சுற்றிலும்வேலியாக அவர்கள் தொடுக்கப்பட்ட வில்லும் வாளும் வேலும் மற்றுமுள்ள ஆயுதங்களைச்செய்தோம். எ-று. 53

மடக்கு-நேரிசைவெண்பா.

வேலையுலகிற்பிறக்கும்வேலையொழிந்தோமில்லை
மாலையரங்கேசனைநாமாலையிலுங்-காலையிலும்
உன்னிநைந்தோமில்லையுடலெடுத்தவன்றுமுதல்
என்னினைந்தோநெஞ்சேயிருந்து.

இ-ள். வாராய் மனமே! வேலையாகிய சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்திலே இறத்தலும் பிறத்தலுமாகிய

வேலையையொழிந்த நாமல்லர், மாலான அரங்கநாயக னைக் காலையும் மாலையுங் கருதிக் கருத்துருகி நைந்த நாமு மல்ல ஆதலாலிந்தச் சென்னமெடுத்த நாள்முதலென்ன கருமத்தைக்குறித்திருந்தோம். எ-று. 54

மடக்கு-கலிநிலைத்துறை.

இரும்புவனம்விரும்புவனமணியரங்கர்பணியரங்க
ரிமயநண்ப [குழைக்கு
வருங்கொடியின் மருங்கொடியின் மனங்குழைக்குங் கனங்
மனங்கன்சாபக்
கரும்புருவம்பொரும்புருவமுத்தநகையொத்தநகை
காந்தள்பூத்தேன்
மருங்குழலுங்கருங்குழலுமுருகுவளையிருகுவளை
மழைக்கண்டாமே.

இ-ள். பெரிதாகிய புவனமுழுதும் போனகமாக விரும்பிய துளவமாலையணிந்த வரங்கநாயகர் பாம்பைத் தானே பள்ளிகொள்ளுமிடமாகக்கொண்டு அவருடைய இமயமாகிய வரையினிடத்திற் பாங்கனே வாரா நின்ற பூங்கொடியை யொத்தவளுடைய இடையானது ஒன்றுமே என்னுடைய ஒழிவில்லாத மனத்தைக் குழைக்குமாறல் மற்றுங் கனத்த குழையையுடையாளுக்குள்ள அவயவமான காமனுடைய வில்லாகிய கரும்பின் துருவையொத்துப் பொருத்தப்பட்ட புருவமும், முத்தினதொளியையொத்த மூரலும், காந்தட்பூவின் மொய்க்கும் வண்டினங்கள் பக்கத்தேயுலாநின்ற கரியகூந்தலும், நறுநாற்றம்வினைந்த இரண்டுகுவளையும், குவளைமலரை யொத்த குளிர்ச்சியையுடைய கண்ணுமான வித்தனையும் வேண்டுமோ என்றறலைபழிக்க. எ-று. 55

பதினான்குசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இதனுள் கேசாதிபாதவரை 32 அவயவங்களும்
அவற்றின் உவமானங்களோடு காண்க.

மழைபிறைசிலைவேல்வள்ளைவெள்ளிலவின்
மலர்முல்லைமதிவளைகழையாழ்
வாரிசங்கெளிறுநத்தைவாய்கலசம்
மணிவடபத்திரமெறும்பூர்

அழகுநீர்த்தரங்கந்துடிசுழியரவம்
அரம்பைஞெண்டிளவராலாமை
அணிதராசிணைகந்துகந்துகிர்தரளம்
அம்புயமரங்கநாடனையார்

குழனுதல்புருவம்விலோசனங்காது
நாசிவாய்நகைமுகங்கண்டங்
குலவுதோண்முன்கைபங்கைமெல்விரல்கள்
கூருகிர்கொங்கைகண்வயிறு

விழைதருமுரோமம்வரையிடையுந்தி
விரும்புமல்குற்றொடைமுழந்தாண்
மிளிர்கணைக்கால்கள்புறவடிபரடு
மென்குதிவிரனகந்தாளே.

இ-ள். அரங்கமாகிய நாட்டின் தொழிலையொத்த மங்கைமாரினுடைய அவயவங்களாகிய அளகமும், நெற்றியும், புருவமும், கண்ணும், காதும், நாசியும், வாயும், நகையும், முகமும், கழுத்தும், குலவப்பட்டதோளும், முன்கையும், உள்ளங்கையும், மெல்லியவிரல்களும், கூரிய நகங்களும், கொங்கைகளும், வயிறும், விழையப்பட்ட ரோமவொழுங்கும், வயிற்றின்வரையும், இடையும், உந்தியும், விரும்பப்பட்ட அல்குலும், தொடையும், முழந்தாளும், மிளிரா நின்ற கணைக்காலும், புறங்காலும், பரடும், மேன்மையாகிய குதிக்காலும், விரலும், நகமும், உள்ளங்காலுமாகிய இவ்வவயவங்களெல்லாம் எவையெவைக் கொக்குமென்றால்: முகிலையும், பிறையையும், யாழையும், தாமரையையும், களிறுகிய மீனையும், சிள்ளைவாளையும், கலசங்களையும், மணியையுஞ், செறிந்த ஆலிலையையும், எறும்பூர்தலி னொழுங்கையும், அழகிய நீர்த்தரங்கத்தையும், துடியையும், பாம்பையும், கதலியையும், ஞெண்டையும், இளவராலினையும், ஆமையையும், அழகிய தராசினையும், பந்தையும், பவழத்தையும், முத்தையும், அம்புயத்தையுமொக்கும். எ-று. (எங்ஙனேயெனில்: அளகபாரத்துக்கு - மழைமேகமும், நெற்றிக்குப் - பிறையும், புருவத்துக்கு - வில்லும், கண்ணுக்கு - வேலும், காதுக்கு - வள்ளையும், நாசிக்கு - எள்ளின்பூவும், வாய்க்கு- இலவின்பூவும், நகைக்கு - முல்லையும், முகத்துக்கு - மதியும், கழுத்துக்குச் - சங்கும், தோளுக்கு - மூங்கிலும், முன்

கைக்கு - யாழும், உள்ளங்கைக்குத் - தாமரையும், விரல் களுக்குக் - கெளிற்றுமீனும், நகங்களுக்குக் - கிளிமூக் கும், கொங்கைகளுக்குக் - கலசமும், வயிறுக்கு - ஆலி லீலையும், அவ்வயிற்றிலுள்ள உரோமவொழுங்குக் - கெ றும்பூராலும், புருவம் அவ்வயிற்றிலுள்ளவரைக்கும் - நீர்த்தரங்கமும், இடைக்குத் - துடியும், பரடுக்குத் - தரா சும், குதிக்காலுக்குப் - பந்தும், விரலுக்குப் - பவழமும், தந்தத்துக்கு - முத்தும், உள்ளங்காலுக்குத் - தாமரையை யும்; இவ்வகை யுவமானங்கண்டுகொள்க.) 56

கைக்கிளை-மருட்பா.

தாளிரண்டும்பாரொன்றுந்தார்வாடும்வேர்வாடும்
வாளிரண்டுங்காதிரண்டில்வந்திமைக்குங் - கோளிர
ஐவகைப்பூதமமைத்தருளரங்கர் [ண்டும்
மைவளர்சோலைமலையில்
தெய்வமல்லளித்திருவுருவினளே.

இ-ள். இரண்டுகாலும் பூமியிலே பொருந்துதலி னாலும், மாலை வாடுதலினாலும், வேர்வையாடுதலினாலும், வாளையொத்த இருவிழியும் இருசெவியினிடத்தில் வந்து வந்திமைத்தலினாலும், கோளிரண்டாகிய விராகுக்கோள் கேதுக்கோள் முதலாகிய கிரகங்களும், பஞ்சபூதங்களை யும் படைத்தருளிய அரங்கநாயகருடைய மை மேகந்த வழுஞ் சோலைமலையிலுள்ள தெய்வமாகிய அணங்கல்ல. இவ்வழகிய வடிவையுடையவள் பூதலமாதராக வேண்டு மென்று தலைவனறிந்துரைத்தது. எ-று. 57

ஊசல்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

உருமாறிப்பலபிறப்பும்பிறந்துஞ்செத்தும்
ஊசலாடுவதடியேனொழியும்வண்ணம்
கருமாயத்தென்னெஞ்சைப்பலகையாக்கிக்
கருணையெனும்பாசத்தைக்கயிறுப்பூட்டி
மருமாலைத்துளவசையவாடிரூசல்
மணிமகரக்குழையசையவாடிரூசல்
திருமார்புவிமாதோடாடிரூசல்
திருவரங்கராசரேயாடிரூசல்.

இ-ள். உருவமானது மாறிமாறிப் பலபலபிறவியா கிய யோனிதோறும் பிறந்துமிறந்து முசலாடுதலை யடி

யேனெழித்துவிடும்படிக்குக் கருமையாய் மாயையோடுங் கூடின என்னெஞ்சைப் பலகையாகச்செய்து தேவரீருடைய கருணையாகிய பாசத்தைக் கயிறுகப்பூட்டி நறுநாற்றமிக்க துளவமாலையசைய ஆடக்கடவீர் இவ்வூசலை. மணிமகரக் குண்டலங்களசைய ஆடக்கடவீர் இவ்வூசலை. சிதேவி பூதேவியோடும் ஆடக்கடவீர் இவ்வூசலை. திருவரங்கராசனே ஆடக்கடவீர் இவ்வூசலை. எ-று. 58

கலிநிலைவண்ணத்துறை.

ஊசல்வடம்போ லூர்சகடம்போலொழியாமே
நாசவுடம்போடாவிசுழன்றே நலிவேனோ
வாசவனும்போதாசனனுங்கூர்மழுவோனும்
நேசமுடன்சூழ்கோயிலரங்காநெடியோனே.

இ-ள். ஓடிபோடிவருவனவும்போவனவுமான ஊசற்கயிறுபோலுமூரப்பட்ட சகடக்காற்போலு மோய்வில்லாமல் அனந்தஞ் செனனங்கடோறு மெடுத்தெடுத்து நசிக்கப்பட்ட உடம்பினுடனேகூட ஆவியானது சுழன்று நலியக்கடவேனோ! வாசவனாகிய இந்திரனும் போதாசனனாகிய பிரமதேவனும் கூரிய மழுவாயுதத்தையுடைய உருத்திரனும் நேசமுடனே சூழ்ந்து துதிக்குங் கோயிலாகிய அரங்கத்தையுடையவனே! நெடியமாலானவனே! எ-று. 59

தழை-கட்டளைக்கலித்துறை.

நேசத்தழைக்குமதயானைமுன்புநின்றோனரங்கம்
பேசத்தழைக்குமென்னன்பனையாய்பெருங்கற்பகத்தின்
வாசத்தழைக்குநறுந்தழைகாணிதுமந்தத்தென்றல்
வீசத்தழைக்குந்தழைபோற்கெடாதுவிலையில்லையே.

இ-ள். அன்பினாலே ஆதிமூலமென்றழைத்த மதயானை முன்னேவந்து காத்தவருடைய திருவரங்கத்தைப் பேசுந்தோறும் பேசுந்தோறுஞ் செழித்துத் தழைக்கப்பட்ட என்னுடைய நண்பையொத்தவனே! பெரிய கற்பக விருட்சத்தினுடைய மணம்பொருந்திய தழையைவிட இது நறுநாற்றமிக்கத் தழைகாணுதலால் மந்தமாருதம்வீசத்தழைக்கும். மற்றுமுள்ளவிருட்சத்தின் தழையைப்போலக்கெடாது. அதுவுமன்றி இதற்கு விலையுமிவ்வளவென்று மதிப்பில்லை. எ-று. 60

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

விலையானதிலையென்று நீதந்தமுத்தம்
வேய்தந்தமுத்தாகில்வெற்பாவியப்பால்
இலையார்புனற்பள்ளிநாராயணன்பால்
எந்தாயரங்காவிரங்காயெனப்போய்த்
தலையாலிரக்கும்பணிப்பாய்சுமக்கும்
தன்றாதையவர்தாமரைத்தாள்விளக்கும்
அலையாறுசூடும்புராணங்கள்பாடும்
ஆடும்பொடிப்பூசியானந்தமாயே.

இ-ள். நாயகனே சொல்லுவாயாக! இதற்கு விலையிடப்படாதென்று நீகொடுத்தமுத்தானது வேயீன்றமுத்தேயாகில் அது இலைபடர்ந்தபுனலிலே துயிலிடங்கொண்டருளிய ஸ்ரீமந் நாராயணனிடத்திலே போய் எனக்குத் தாயானவனே! அரங்கனே! இரங்கவேணுமென்று கபாலத்தைக் கையிலேந்தி இரக்கும் பாம்பாகிய பாயலைச்சுமக்குந் தன் தாதையாகிய பிரமதேவனுனவன் அவருடையபாததாமரையை விளக்கப்பட்ட அலையாறாகிய கங்கையைத் தரிக்கும் புராணங்களை யெல்லாம் புகலும் பொடியாகிய நீற்றைப்பூசிக்கொண்டு ஆனந்தமாக நின்றாடவும் ஆடுமெய்த்தன்மையொன்று மின்மையால் அம்முத்தமன்று. எ-று. (இதின்கருத்து வேயீன்றமுத்தமென்பது ஈசுரனுகையால் அவர் விஷ்ணுவினிடத்திலே செய்தவைமையை விநோதமாகவிரித்தாரென்றறிக.)

தவம்-கட்டளைக்கலித்துறை.

ஆனந்தமாயரங்கற்கேயுயிர்களடிமையென்னும்
ஞானந்தனுலைம்பொறிவாசல்சாத்திநற்றாளைப்பற்றி
ஈனந்தரும்பற்றுமற்றென்றும்யானெனதென்னுமபி
மானந்தவிர்ந்திருப்பார்க்கிதுபோலில்லைமாதவமே.

இ-ள். ஆனந்தமாகிய பேரின்பத்திலழுந்தியரங்கனுக்கே உயிர்களாகிய ஆன்மாக்கள் அடிமையென்றறியத்தக்க ஞானமாகிய கபாடத்தினலே ஐம்பொறியாகிய மெய் - வாய் - கண் - மூக்குச் - செவியென்னும் வாயல்களையடைத்து நன்மைநல்கும் நளினமாகிய தாளைப்பிடித்திட்டு வீனத்தைத்தராநின்ற ஆசாபாசமான பற்றேதுமின்றி யானெனதென்னுஞ் செருக்குமுதலாகிய மாணபி

மானங்களைத் தவிர்ந்திருக்கத் தக்கவர்களுக்கு இதைப்போ
லொத்த தவமியாதொன்றும் இல்லை. எ-று. 62

இதுவுமது-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

மாதவங்களென்றோதவங்களில்
  மருவுசீவனென்றொருவனீபெரும்
பூதமல்லையிந்திரியமல்லையைம்
  புலனுமல்லைநற்புந்தியல்லைகாண்
சீதரன்பரந்தாமன்வாமனன்
  திருவரங்கனுக்கடிமைநீயுனக்
கேதுமில்லையென்றறியறிந்தபின்
  னீதின்மாதவமில்ல்லையெங்குமே.

இ-ள். பெருமைமிக்க தவங்களென்று சொல்லப்
பட்ட அவங்களிலே சீவனென்று மருவப்பட்ட ஒருவனே
கேளாய்! மேவுதற்கு நீவந்து பஞ்சபூதமுமல்ல, பஞ்
சேந்திரியமுமல்ல, ஐம்புலனுமல்ல, அதுவுமன்றி,
இப்புந்தியுமல்லவே காணுகையால் சீதரனென்றும், வா
மனனென்றும், சிறந்ததிருவரங்கேசனுக்கே அடிமையா
னேன் எனக்கேதொரு குற்றமில்லையென்றறி இப்படி
யறிந்தாயாகிற் பின்பு இதைவிட மாதவமான தேதொ
ன்றுமில்லை. எ-று. 63

இரங்கல்-கட்டளைக்கலித்துறை.

எங்காந்த ளங்கைநல் லீரென்செய் கேனிரண் டேந்
திழையார், தங்காந்த னென்றறிந் தாலுநில் லாது தரை
க்குநெய்க்கும், அங்காந்த செம்பவ ளத்தெம்பி ரானரங்
கன்புயங்கள், செங்காந்த மால்வரை யோவிரும் போவெ
ன்றன் சிந்தனையே.

இ-ள். உம்முடைய காந்தளாகிய அங்கையையு
டைய நங்கைமீர்களே கேளீர்! யானென்னசெய்யப்
போறேன் எந்திழையாராகிய ஆவரணங்களுடைய சீதே
விக்கும் பூதேவிக்குங் கணவனென் றறிந்தேனாயினும்
என்சிந்தையானது தரித்து நிற்பதில்லை. தரையையுண்ப
தற்கும் நெய்யைக்குடிப்பதற்கும் அண்ணாந்தசெம்பவழம்
போன்ற திருவாய்மலரையுடைய எம்பிரானாகிய அரங்க
நாயகருடைய திருப்புயங்கள் செவ்விதா யுன்னிதமாகிய
காந்தக்கல்மலையோ? என்னிதயமான திரும்போ? எ-று.
(இன்னங் காந்தத் துக்குமிரும்பிற்கும் கண்டளவே கலப்

பது காரணமாதலால் "செங்காந்த மால்வரையோ விரும் போவென்றன் சிந்தனையே" என்றார்.) 64

களி- தாழிசை.

சிந்தையிற்குடிகொண்டிருந்து
திருக்கறுத்தடிமைக்கொளுந்
திருவரங்கர்பொருப்புயர்ந்த
திருப்புயம்புகழ்களியரேம்
புந்திமிக்கதுவந்துபுக்கது
போதமாதர்களேழுவர்தம்
பூசையேமகபூசையென்றது
புதுமையன்றிதுபுத்தர்காள்
அந்தரத்திமையோரருந்து
மருந்தும்வெள்ளையதன்றியே
அரியசாதிகொளாதமானிட
ரகலிடத்தினிலில்லையே
மந்திரத்தினிலாததேவதை
வானகத்தினிலில்லையே
வடிவிலாதவையண்டகோளம்
வளைந்தவைப்பினுமில்லையே.

இ-ள். புத்தர்களேவாருங்கள்! புகலக்கேளீர்! சிந்திப்பவருடைய சிந்தையிலே குடியாய் விட்டு நீங்காமலிருந்து திருக்காகிய அஞ்ஞானத்தையறுத்து ஆட்கொண்டருளாநின்ற திருவரங்கேசருடைய வரையிலுமுயர்ந்த புயங்களைப் புகழ்ந்துகொண்டாடும் களிப்பையுடைய களியாநாங்கள் மனதுக்கிதமிகுந்த மகிழ்வானது வந்து வாய்த்தது. அதேதென்றால், சத்தமாதர்களுடைய வாம பூசையே பெரிதாகிய பூசையென்பது. அது நவமாய் நடக்கின்றதல்ல. அதெப்படியெனில், விண்ணுலகிலுள்ள விண்ணவரும் போசிக்கப்பட்ட அமுதமும் வெள்ளை தான். அதுவுமன்றி அரிதாகிய சாதிகொள்ளாத மானிடர் அகண்டபூமியினிடத்திலேயில்லை. அதுவுமன்றிப் பெருமைமிக்க மந்திரத்தில் வசப்படாததெய்வங்கள் வானுலகத்திலுமில்லை. அதுவுமன்றி யொருவடிவில்லாத வஸ்து இந்த அண்டகோளம் வளர்ந்தவைப்பிலேயும் இல்லை. எ-று. (இதன் கருத்து. தேவாமுர்தம் - அது

வும் நிறமொன்ருகையால் வெள்ளையென்ருர். சாதியென்பது - கள்ளாகையாற் கள்ளுக்குடியாதவருலகத்திலில்லையென்ருர். மந்திரமென்பது - மதுவாதலால் மதுவில்மகிழாத தெய்வம் வானிலு மில்லையென்ருர். வடிவென்பது - மதுவாதலால் மதுவில்லாதவஸ்து அண்டகோளவைப்பினுமில்லையென்ருரென்று இதனுள்ளுநரை கண்டுகொள்க.) 65

குறளடி வஞ்சிப்பா.

இவை பத்தொன்பதும் வஞ்சி அடிகள்.

இல்லறமெனத் துறவறமெனச்
சொல்லறம்பிற துணையன்றெனப்
பவக்கட லுட்டுவக்கறுப்பான்
காவிரியிடைப்பூவிரிபொழிற்
சிலமந்திகள் சினைதாவப்
பலதெங்கின்பழக்குலையுதிர
அடர்கமுகின்மிடறொடிதரத்
தேமாங்கனிசிதறுபுவிழ
மூடப்பலவின்குடக்கனியுக
வரம்பைக்கனிவரம்பிற்புக
வயன்மருங்கின்மலர்ப்பொய்கையுட்
டுயில்வலம்புரி துண்ணெனவுறத்
தாஅட்டாமரைத்தவிசுறைதரு
சூஉட்டோதிமம்பேஎட்டுடனெழ
மயிற்சேவன் மனங்களிப்பக்
குயிற்பேடைக்குலமொளிப்ப
மழைமுகிலெனமுழவதிர்தரு
திருவரங்கப்பெருநகருள்
அரவணைமிசைப்றிதுயிலமர்ந்
தருள்புரி.

இது ஈரடிநேரிசை ஆசிரியச்சுரிதகம்.

திருநாரணனைச்சேர்ந்தனம்
சரணரவிந்தந்தஞ்சமென்றிரந்தே.

இ-ள். இல்லறமென்றுந் துறவறமென்றுஞ் சொல்லத்தக்க அறமுதலானதெல்லாந் துணையல்லவென்று பிறவிக்கடலினது வந்தனையை யறுக்கும்பொருட்டாய்க்

காவேரியினிடத்திலே பூவிரிந்த பூங்காவிற் சில குரங்
கள் கிளைகளிற்றாவும்போது பலபலதென்னம் பழக்கு
ளுதிரவும், நெருங்கின கமுகமரங்களின் மிடறுகளொ
யவும், இனியதேமாங்கனிகளுடனே சிதறிய பூமலர்கள்
விழவும், அழகுற வளர்ந்த பலாமரத்தினுடைய குட
போன்ற கனிகளுதிரவும், வாழைக்கனிகள் வரம்பிலே
புகவும், வயலினது மருங்கின் மலர்ப்பொய்கைக்குள்ளே
துயிலப்பட்ட வலம்புரிசங்கமானது திடுக்கிட்டதிரவுந்
தளையுடைய தாமரைத்தவிசிலே யுறையப்பட்ட சூட்டி
னையுடைய அன்னமானது பெட்டையன்னத்துடனே
யெழுந்திருக்கவும், மயிற்சேவல் மணங்களிப்பவுங், குயிற்
பேடைக் குலமொளிப்பவும், மழைமேகம்போலே முழவ
திரப்பட்ட திருவரங்கமாகிய பெரியநகரியினிடத்திலே
அரவணைமேலே யோகநித்திரையமர்ந்தருளிய அழகிய
நாராயணனைச் சேர்ந்தனங்காண். அவருடைய சரணம்
புயத்தையே தஞ்சமென்றிரந்து. எ-று. 66

மடக்கு-எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

இரவினையிரவின்மதியினைமதியுள்
 இறையினையிறையுமெண்ணரிய
கரவனைக்கராவின்முனிவனைமுனிவர்
 கருத்தனைக்கருத்தனைத் துடைத்தாள்
பரமனைப்பரமபதத்தனைப்பதத்துட்
 பாரனைப்பாரநத்தாரும்
அரவனையரவினரங்கனையரங்கத்
 தடிகளையடிகள்சேவியுமே.

இ-ள். இரவானவனை, இரவினிலியங்குமதியானவனை,
மதிக்குளுறையப்பட்ட இறைவனானவனை, இறையுமெண்
ணுதற்கரிய கரவானவனை, கராவை முனியப்பட்டவனை,
முனிவர்கள் கருத்தைவிட்டுக் கடவாதவனை, கருவைத்து
டைத்து ஆளப்பட்ட பரமனானவனை, பரமபதமாயுள்ள
வனை, பதத்துள் அடங்கப்பட்ட பாரையுடையவனை
பாரெல்லாம் பரவிப் புகழப்பட்ட ஓசையாகிய அரவத்
தையுடையவனைக் கண்டு அவர் திருவடிகளைச் சேவியுங்
கள். எ-று. (அடிகள் சேவியுமென்றது மகாத்துமாக்
களை சேவியுங்களென்றுமாம்.) 67

இருபனிக்காலம்-கலிநிலைத்துறை.

சேவிக்கவாழ்விக்குமெங்கோனரங்கன்றிருக்கோயில்சூழ்
காவிற்கலந்தாசைதந்தேகினர்நெஞ்சுகன்னெஞ்சமோ
வாவிப்புறத்தன்னமேயின்னமேதோவரக்கண்டிலேன்
பாவிக்கநேகந்தனிக்காலமிந்தப்பனிக்காலமே.

இ-ள். கண்ணினாற்கண்டு சேவிக்கப்பெறில் வாழ்விக்குமெமக்கிறைவனாகிய அரங்கநாயகனுடைய வழகிய கோயிலைச் சூழ்ந்தகாவில்கூடிக்கலந்திருந்து கனவிலும் பிரியேனென்று காதலைக்கொடுத்துப்போன காதலர் நெஞ்சமானது கன்னெஞ்சோ? தடாகத்தின் பக்கத்தேசஞ்சரிக்காநின்ற அன்னங்காளிந்நேரவரைக்கு மேதுகாரணமாகவோ வரக்காண்கிலேன்! பாவியெனக்கு இந்தப் பனிக்காலம் பின்னிடுகிறது அநேகங்கோடிகாலந் தனித்திருந்து தள்ளுதற்கரிய நெடுங்காலமாயிற்று. எ-று. 68

குறம்-அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

காலமுணர்ந்த குறத்திநான் கருதினை யொன்றது
சொல்லுவேன், பாலக னுச்சியி லெண்ணெய்வார் பழகிய
தோர்கலை கொண்டுவா, கோல மலர்க்கையின் மங்கை
நின் கொங்கை முகக்குறி நன்றுகாண்; ஞால முவந்திட
நாளையே நண்ணுவை நம்பெரு மாளையே.

இ-ள். நான் திரிகாலவர்த்தமானமுந் தெரிந்த குறத்திகாண் வாரும்பெண்ணே! நீ நெஞ்சிலேயொன்று நினைத்தாய் அதை நிசமாய்ச்சொல்லுகிறேன் என்னுடைய பாலகனுச்சிக்கு எண்ணெய்வாரும் பழமையாகிய வுடையுத்தரிய முண்டாகிற் கொண்டுவாரும் அழகியமலரால் நிறைத்த அளகபாரத்தையுடைய மங்கையே! உன்னுடைய கொங்கையின் முகக்குறி நன்மையாயிருந்தது காண் அதனாலிந்த ஞாலமுழுதும் உவப்பெய்தும்படிக்கு நாளைத்தானே யணையக்கடவை நம்பெருமாளை. எ-று. 69

மேகவிடுதூது-கட்டளைக்கலித்துறை.

பெருமாலைபார்க்குரைப்பேனுமக்கேவிண்டுபேசினல்லால்
மருமாலையாயெழுங்கார்க்குலங்காடொண்டர்காற்பொடித
திருமாலைகொண்டதிருமாலரங்கர்தந்தெய்வத்துழாய் [ன்
மருமாலைவாங்கிவம்மின்னந்திமாலைவருமுன்னமே.

இ-ள். நான்கொண்ட பேராசையை கரியவொழுங் காயெழா நின்ற கார்குலங்காள் உங்களுக்கே வாய்விட் டுரைப்பதல்லாமல் உங்களையன்றி யார்க்குரைக்கப்போ றேன். தொண்டரடிப்பொடியாழ்வார் சொல்லியருளிய திருமாலையைக் கொண்டருளிய திருமாலாகிய அரங்கரு டைய திவ்வியமாகிய மணம்பொருந்திய திருத்துழாய் மாலையை வாங்கி வாருங்கள் அந்திமாலையானது வரு கிறதற்கு முன்னமே. எ-று. 70

நேரிசைவெண்பா.

முன்னம்பிறந்தபிறப்போமுடிவில்லை
இன்னம்பிறப்பிக்கவெண்ணுதே-தென்னரங்கம்
மேவிக்கிடந்தானேவீற்றிருக்குநின்பதத்தென்
ஆவிக்கிடந்தானருள்.

இ-ள். அடியேன் முன்னே பிறந்த பிறப்பிற்கு இவ்வளவென்றோர் முடிவில்லை ஆகையால் இன்னமும் பிறந்திறக்கும்படிக்கு உமது திருவுளத்திலெண்ணவேண் டாம் திருவரங்கத்திலே சேஷசயனத்தில் திருக்கண்வள ர்ந்தருள்பவனே உனது பாததாமரை நிழலிலே அடை ந்து வீற்றிருக்கும்படிக்கு எனது ஆவிக்கு இடந்தந்தரு ள்வீராகவேண்டும். எ-று. 71

இரங்கல்-மடக்கு.

பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

அரும்புன்னைகத்தடங்காவே
அவாவென்னைகத்தடங்காவே
அம்போருகக்கண்பொருந்தேனே
அழுநீருகக்கண்பொருந்தேனே

பரம்புங்கடலூர்நாவாயே
பாவிக்கடலூர்நாவாயே
பார்மீதுயரமறியலையே
படுமென்றுயரமறியலையே

கருங்கட்கயலேமாசுறவே
கரைவேற்கயலேமாசுறவே
கண்டற்போதுகுவாலுகமே
கங்குற்போதுகுவாலுகமே

குரும்பைதழைக்குங்கரும்பனையே
குயில்வந்தழைக்குங்கரும்பனையே
குருகீர்நந்தமராங்கரையே
கொணரீர்நந்தமரங்கரையே.

இ-ள். அரிதாகிய விசாலமாகிய புன்னைவனமே யான்கொண்ட ஆசையானது என்னிதயத்திலடங்குதில்லை, தாமரையினிடத்திலே பொருந்தின வண்டே யானழுதநீராருதொழுகையினுற் கண்ணுறக்கங் கொள்ளவில்லையே, பரவியகடலிலே ஓடாநின்ற மரக்கலமே பாவியேனுக்கு நாவும் வாயும் மலர் தூற்றுகின்றது, தீயினுற்சுடுந் தன்மையாகுது, பூமிமீதுயர்ந்துவிழாநின்ற அலையே யான்படுந்துயரங் கண்டறியவில்லையே, கருமையாகிய கண்ணையுடைய கயலே பெரிய சுருவே கரைந்துருகப்பட்ட எனக்கு அயலாரோடொத்திருந்தார்கள், மசான்வுறவினருந் தாழம்பூவுமாநின்ற வெண்மணற்குன்றே கங்குலாகிய ஓர்பொழுது செல்வது அனேக யுகராசி செல்வதென்னும்படிக்காகின்றது, குரும்பையானது தழைக்காநின்ற கரியபனையே கோகிலமானது கரும்பனுகிய காமவேளை வரக்கூவுது ஆகையாற் குருகாகிய பட்சிகள் சங்குகள் அமரப்பட்ட அழகிய கரையே நம்முடைய அரங்கநாயகரைக் கொணர்ந்துவருவீராகவேண்டும். எ-று. 72

நேரிசை ஆசிரியப்பா.

இதனுள் பத்துத்தாமரைகளும் ஒன்பது அதிசயங்களுங்காண்க.

கரைபொருதொழுகுங்காவிரியாறே
ஆற்றிடைக்கிடப்பதோரரந்தலையரவே
அரவஞ்சுமப்பதோரஞ்சனமலையே
அம்மலைபூத்ததோரரவிந்தவனமே
அரவிந்தமலர்தொறுமதிசயமுளவே
கடல்விளிம்புடுத்தகண்ணகன்ஞாலம்
உடன்முழுதளந்ததொருதாமரையே
வகிரிளம்பிறையான்வார்சடைதேங்கப்
பகீரதிகான்றதோர்பங்கேருகமே
யாவையும்யாரையும்படைக்கநான்முகக்
கோவையீன்றதோர்கோகனகமே
திருமகட்கினியதிருமனையாகிப்
பருமணியிமைப்பதோர்பதுமமலரே

சடைத்தலை தாழ்த்துச்சங்கரனிரப்ப
முடைத்தலைதவிர்த்ததோர்முளரிமாமலரே
ஆங்குமண்டோதரியணிந்தமங்கலநாண்
வாங்கவில்வாங்கியவனசமுமொன்றே
விரிந்தபுகழிலங்கைவேந்தற்குத்தென்றிசை
புரிந்தருண்மலர்ந்ததோர்புண்டரீகமே
மண்டிணிஞாலமும்வானமுமுட்பட
அண்டமுண்டுமிழ்ந்ததோரம்போருகமே
கடைசிவந்தகன்றுகருமணிவிளங்கி
இடைசிலவரிபரந்தினியவாய்நெடியவாய்
இன்பந்தழீஇயவிருபெருங்கமலம்
துன்பந்தழீஇயதொண்டனேனையும்
உவப்புடனொருகானோக்கிப்
பவக்கடல்கடக்கும்பரிசுபண்ணினவே.

இ-ள். இருகரையுமோதிப் பச்சிமவாக்கினியாய் வராநின்ற காவேரியென்றோர் ஆறுண்டு, அந்த ஆற்றினிடத்திலே ஐந்து தலையையுடைய ஒரு நாகங் கிடக்கும், அந்த நாகமானது சுமக்கப்பட்ட ஒரு நீலமலை, அந்த நீல மலையானது செந்தாமரை வனமாய்ப் புஷ்பிக்கும், அப்படி புஷ்பித்த செந்தாமரை மலர்கள்தோறும் ஒவ்வொரு அதிசயமுண்டு, அதிலே முதலாவது : கடலை ஆடையாகச் சூழவுடுத்த விடமகன்றவுலகமுடன் எல்லா மளந்த ஒரு தாமரையென்னவே வலத்தாளாகுது. இரண்டாவது : வகிர்ச்சியாக வகிர்ந்ததுபோன்ற இளம் பிறையைத் தரித்த அரனுடைய நீண்ட சடையிலே நிரம்பக் கங்கையையுமிழ்ந்த ஒரு தாமரையென்னவே இடத்தாளாகுது. மூன்றாவது : உயர்திணை அஃறிணை ஆகிய சராசரங்களையுண்டுபண்ணும் பொருட்டாய் நான்குமுகமுடைய பிரமதேவனைப் பெற்ற ஒரு தாமரையென்னவே உந்தித்தானமாகுது. நான்காவது : சீதேவிக்கு அழகியவீடாய் பெரிதாகிய கவுஸ்துவமெனப் பெயர்பெற்ற மணிவிளங்கப்பட்ட ஒரு தாமரையென்னவே மார்பகமாகுது. ஐந்தாவது : சடைமுடி தாழ்த்துச் சங்கரனவன் இரந்த பவந்தவளவில் முடையாகிய துற்கந்தம் பொருந்திய பிரமகபாலம் அவர்கையைவிட்டகலச் செய்த ஒரு தாமரையென்னவே வலக்கையாகுது. ஆறுவது : மண்டோதரி அணிபப்பட்ட மங்கலநாண்வாங்க

வில்லைவளைத்த ஒரு தாமரையென்னவே இடக்கையாகுது. ஏழாவது: மிகுந்த புகழையுடைய இலங்கைவேந்தனுகிய விபீடணற்கு அந்தத் தெற்கின்கணுண்டாகிய திசையைக் கொடுக்கத்தக்கதாக மலர்ந்த ஒரு தாமரையென்னவே முகமாகுது. எட்டாவது: நீர் சூழ்ந்த மண்ணும் விண்ணுமுட்பட அண்டமுழுதும் உண்டுமிழ்ந்த ஒரு தாமரையென்னவே வாயாகுது. ஒன்பதாவது: இருகடையுஞ் சிவந்து விசாலமாய்க் கருமையுடைய மணிப்பாவை விளங்கிய இடையிலே சிறிது செவ்வரிபரந்து இனியதாய் நெடியதா யின்பந்தானே தழுவிய இரண்டு பெரிய தாமரையானதுவென்னவே கண்களாகுது. அது அன்பந்தானே தழுவிய தொண்டனுகிய என்னையும் உவகையுடனே ஒருக்கால்பார்த்து ஒருவராலுங் கடப்பித்தற்கரிய பிறவிக்கடலைக் கடக்கும்படி செய்தது. எ-று. 73

கார்காலம்-வண்டு: கலிவிலைத்துறை.

பண்கொண்டவேயூதுசெவ்வாயரங்கேசர்
பைம்பொன்னிநாட்
டெண்கொண்டபேராசைதந்தார்மறந்தார்கொ
லிசைவண்டுகாள்
விண்கொண்டமலைமீதுவிண்மாரிபொழிகின்ற
விசைபோலவென்
கண்கொண்டமுலைமீதுகண்மாரிபொழிகின்ற
கார்காலமே.

இ-ள். பண்ணுகிய இசைபொருந்திய வேய்ங்குழலை யூதப்பட்ட சிவந்த வாயையுடைய அரங்கநாயகருடைய செழுமைபொருந்திய காவேரிநதிசூழ்ந்த நாட்டிலே எண்ணுதலையெய்தி பேராசையைக்கொடுத்த தலைவரானவர் மறந்துவிட்டாரோ பண்களை மொழியத்தக்க வண்டினங்களே! விண்ணளாவிய வெற்பின்மேலே விண்ணிலிருந்து விண்மழைபெய்கின்ற விசையைப்போலே என்னுடைய கண்பொருந்திய முலையின்மேலே கண்ணிலிருந்து கண்மழைபெய்கின்ற கார்காலத்தை. எ-று. 74

கைக்கிளை-கட்டளைக்கலித்துறை.

காரகமோநம்வடதிருவேங்கடக்கார்வரையோ
நீரகமோநெடுவானகமோ துயினீடுபணிப்
போகமோதென்றிருவரங்கப்பெருங்கோயிலென்னும்
ஊரகமோவிடந்தண்காவிரின்றவொருவருக்கே.

இ-ள். மேகத்தினிடமோ, அன்றியும் தன்மையை யுடைய வடக்கின்கண் ணுண்டாகிய அழகிய திருவேங் கடமென்னும் மேகந்தவழும் மலையோ, முன்னீரிடமோ, நெடிதாகிய வானினிடமோ, தூக்கமிக்கபாம்பினது பெரி தாகியயிடமோ, அழகிய தெற்குத்திசைக்குத் திருப்பதி யாகிய திருவரங்கமென்னும் பெரியகோயிலாகியவூரினி டமோ, குளிர்ச்சியையுடைய காவினிடத்தினின்ற ஒருத் தியாகிய ஒப்பற்ற இவளுக்கிடமாவது. எ-று. (மின்னற் கொடிபோன்றமையால் இவளுக்கிடங் காரகமோவென் றார். வரையரமகளிர் போன்றமையால் இவளுக்கிடம் வடதிருவேங்கடக் கார்வரையோவென்றார். நீரரமகளிர் போன்றமையால் இவளுக்கிடம் நீரகமோவென்றார். நாககன்னியர் போன்றமையால் இவளுக்கிடம் பணிப் பேரகமோவென்றார். புவிமாதர்போன்றமையால் இவ ளுக்கிடங் கோயிலென்னு மூரகமோவென்றார் என்பது கருத்து.) 75

வஞ்சித்துறை.

ஒருநயம்பேசுவன்-திருவரங்கேசர்தாள்
மருவுமின்றசைமாங்-கருமவன்பாசமே.

இ-ள். வாருங்கள் உலகத்திரே! குக்ஷத்திலே மோக்ஷம் உண்டாகும்படி ஒரு நயமாகிய ஊதியம்பேசு கிறேன் திருவரங்கேசருடைய திருவடித்தாமரை நிழலி லேசென்று சேருங்கள் வீணாகிய கருமகாண்டத்திலே வலிதாகிய உங்களுடைய ஆசாபாசமெல்லாம் அதமாய் விடும். எ-று. 76

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பாசமாமடியர்பானேசமாமடிகளும்
பைம்பொனாடையுஞ்செம்பொன்மாமேனியும்
ஆசையாமலருளாள்வாசமார்பகலமும்
அஞ்சலென்றருள்செயுங்கஞ்சமுங்கருணையின்
தேசுலாவதனமும்மாசிலாமுறுவலுஞ்
சீரிதாயெழுதுகத்தூரிநாமமுமெனக்
கீசனார்திருவரங்கேசனார்திகிரியும்
இலகுவெண்சங்குமேயுலகமெங்கெங்குமே.

இ-ள். ஆசையாகிய அடியார்கள் இதயமலரிட த்திலே நேசமாகிய திருவடித்தாமரைகளும், பசுமை

யுடைய பீதாம்பரமும், செவ்விதாயழகிய திருமேனியும், பொற்றாமரைப் பூவிலுறையப்பட்டவள் வாசமாகிய மார்பகமும், பரமென்றடைந்தவர்களைப் பயப்படாதீர்கள் என்று அருள்புரியுங்கராம்புயமும், கைதையாகிய தாழம்பூவும், ஒளிவிளங்கிய திருமுகமும், மறுவிலாத புன்முறுவலும், சீரிதாயெழுதிய கஸ்தூரிநாமமும், எனக்கிறைவனாகிய திருவரங்கேசருடைய சக்கராயுதமும், இலகப்பட்ட வெள்ளிய சங்கமுமே தெரியப்பட்டது உலகமெங்கெங்கும். எ-று. 77

வஞ்சி விருத்தம்.

எங்கணு நிறைந் துறையுமெம்பிரான்
கொங்கணுகிவண்டுமுரல்கோயில்சூழ்
உங்கள்வரையெங்கள்வரைபொன்றியே
மங்கையுனகொங்கைகளைமானுமே.

இ-ள். எள்ளுமெண்ணெயும்போல் எங்கெங்கும் நிறைந்துறையப்பட்ட எம்பிரானாகிய வரங்கருடைய சுகந்தத்துக்காயடைந்து வண்டினங்கள் சத்திக்கப்பட்ட திருவரங்கத்தைச்சூழ்ந்த உங்கள் மலையினதிடமும் எங்கள் மலையினதிடமும் நெருங்கி இடமணித்தாயிருப்பது எத்தன்மைத்தென்றால் மங்கையே! உனது கொங்கையாகிய மலைகள் ஒன்றோடொன்று சமீபத்திருப்பதுபோலிருக்கும். எ-று. 78

இரங்கல் - கலிநிலைத்துறை.

மானார்கேசன்மேலார்மாலார்வாழ்கோயில்
தேனார்காவிற்பூவாராயுந்தேனேபோல்
நானாபோகத்தின்பங்கண்டார்நான்வாடப்
போனார்வாராதேதோவோதாய்போதாவே.

இ-ள். கங்கையாகிய பெண்ணானவள் நிறைந்த சடாகேசத்தை உடையவன் முதலாய் மேலோர் யாரும் அன்பாயடைந்து வாழுந்திருவரங்கத்தினிடத்தின் தேன்கள் நிறம்பிய பூங்காவில் பூவுகடோறுமாராயப்பட்ட வண்டைப்போல என்னிடத்தில் நானாபோகத்தினிடத்தின்பநுகர்ந்து இப்போது நான் வாட்டமுறும்படி விட்டுப் பிரிந்துபோன தலைவர் வாராமை எதுகாரணமோ எனக்குச்சொல்லவேண்டும் போதாவே. எ-று. (போதாவென்பது - பொருநாரை.) 79

மதங்கு-அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

போதவெனக்கெளிதானர்போதவனுக்கரிதானர்
நாதாரங்கர் திருத்தாளுடியரங்கினடக்கின்
ஓதுமதங்கிநடித்தாலுள்ளமதங்கியரக்காம்
வேதமறைந்திடவல்லீர்விரையமறைந்துவிடீரே.

இ-ள். மிகவும் அடியேனுக்கு எளிதானவராய்ப் பூவயனுகிய பிரம்மாவுக் கரிதானவராய்ச் சகலபுவனகர்த்தாவாகிய அரங்கநாயகருடைய அழகிய திருவடியை நாடி அரங்கனிடத்திலே நடித்துத்துதிக்கு மதங்கியானவள் அப்படி நடித்தால் உள்ளமானது அக்கினியிலிட்ட அரக்காயுருகுமாகையால் வேதமோதவல்லவர்களே வினையை விரைந்து வெளிப்படாமல் மறந்துவிடக்கடவீர்கள். எ-று. 80

பண் - தாழிசை.

விடாதுபூமடந்தைமார்விரும்பவாயர்மாதர்தோள் [ன்
வியந்துமுன்னயந்தவர்க்குவிற்குமெங்கள்கொங்கைதா
அடாததன்றுபாணவின்னமங்ஙனன்றியிங்ஙனம்
அரங்கரன்புகூரவின்பமாகவல்லவல்லவே
எடாதிருக்கின்வாய்திறக்குமெங்களையனுச்சிதோய்
எண்ணெய்பட்டமெய்யிலிட்டமூத்துமூத்தரீயமும்
படாமுகந்திறந்தசைந்துமழலைவாயின்மணமருப்
பசுநரம்புபுடைபரந்துபால்சுரந்தமுலையுமே.

இ-ள். விட்டுநீங்காமல் கமலையானவள் விரும்பும் மார்பையுடைய மாயவனது அழகிய புயத்தை வியப்பமெய்தி விரும்பியவர்க்கு விற்கப்பட்ட எங்களுடைய கொங்கையானது அவருக்கு அடுக்காதென்று அடுக்கவேபடுக்குமாகையால் இன்னமும் அவ்விடத்திலிருக்க விருப்பமின்றி இவ்விடத்திலெய்தி அரங்கரானவர் அன்புகூரும்படிக்கு இன்பமாகத்தக்கது கண்டுமெடாமலிருந்தால் வாய்திறந்தழுங் குழந்தையாகிய எங்களையனுடைய உச்சியிலே தோய்ந்த எண்ணெயானது துயிலாகி அசையாநிற்கும். மழலைமொழி வழங்காநின்ற வாயினது மணமருது பசுமைபெற்ற நரம்பானது பக்கத்திற் பரந்து பால்சுரந்திருக்கு முலையானது. எ-று. 81

இரங்கல்-கட்டளைக்கலித்துறை.

முலைகொண்டபான்மணம்வாய்மாறிற்றில்லையம்
மொய்குழலோ
அலைகொண்டதின்னமென்கைபணையேயலை
யாழிவற்றச்
சிலைகொண்டசெங்கையரங்கேசர்தாள்கொண்ட
தேசமெல்லாம்
விலைகொண்டவாள்விழியாள்சென்றவாறெங்ஙன்
வெஞ்சுரமே.

இ-ள். முலையுண்டபாலினது மணமானது வாய் விட்டு மாறினதில்லை, மொய்த்தவளகமானது முடிக்கத் தக்கபருவமின்றி யலையாநிற்கின்றது, இன்னமுமென்னுடைய கையணையே அலையையுடைய சமுத்திரம்வற்ற வில்லைப்பிடித்த செங்கரத்தினையுடைய அரங்கேசர் திருவடித்தாமரையால் அளந்துகொண்ட தேசமுழுதும் விலைபெற்ற வாள்போன்றவிழியையுடையவளே! எவ்வாறு சென்றாய் இறைவர்பின் கடிதாகிய காட்டுவழியில். எ-று.

இரங்கல்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வெஞ்சமங்கருதுங்கஞ்சனுமெருதும்
வேழமும்பரியும்வீழமுன்பொருதார்
தஞ்சமென்றவருக்கஞ்சலென்றருளுந்
தாயிலன்புடையார்கோயிலின்புடையார்
மஞ்சுவண்டினமுந்துஞ்சுதண்டலைவாய்
வல்லியொன்றதிலேயெல்லியுந்திகழுங்
கஞ்சமுண்டதிலே நஞ்சமுண்டதிலே
கள்ளமுண்டதுவென் னுள்ளமுண்டதுவே.

இ-ள். வெவ்விதாகிய போரைக்கருதுங் கஞ்சனென்பவனையும், சகடாசுரனையும், குவலையாபீடமென்னும் யானையையும், குதிரைவடிவாகிய கேசியென்பவனையும் இறந்துவிழும்படி முற்காலத்திற் பொருதினவர். சரணமென்றவருக் கரணமாயஞ்சாதீரென்றளிக்குந் தாயினுமெண்மடங் கதிகமாகிய அன்பினையுடைய அரங்கநாயகருடைய கோயிலின்பக்கத்திலே மேகசாலமும் வண்டினமும் துயின்மேவும் பூங்காவில் வல்லியாகிய ஒருகொடியுண்டு அதிலே இரவினுங்குவியாமல் மலருந்தாமரையுண்டு அதிலே ஆலகாலவிஷமுண்டு அந்த ஆலகால

விஷத்திலே ஒரு கள்ளத்தனமுண்டு அது என்னுள்ள த்தை யுண்டுவிட்டது. என-று. 83

முதுவேனிற்காலம்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

உண்டுமிழ்வாசமுடன்றண்டலைமாருதம்வந்
துலவியசாளரமுங்குலவியவாணிலவும்
விண்டலர்பூவணையும்மென்பனிநீர்புழுகும்
மேனியிலும்முதிராவேனிலுமாகியவால்
அண்டர்தொழும்பெருமாளம்புயமின்பெருமா
ளருமறையின்பெருமாளழகியநம்பெருமாள்
புண்டரிகங்கமழுந்தண்டுறையோதிமமே
புன்னைகள்சிந்தலரேயின்னமும்வந்திலரே.

இ-ள். தாமரைமணக்குந் தடாகம்பொருந்திய நீர்த்துறையிற்றங்கிய வன்னமே புன்னைகத்திலுதிராநின்ற பூவே சொல்லக்கேளீர்! உண்டுமிழப்பட்ட மணத்தினுடனே தண்டலையாகிய காவிற்றவழ்ந்து மந்தமாருதமானது உலவாநின்ற சாளரவாயலுங் குலாவப்பட்ட ஒளி பொருந்திய நிலம் முகிழ்விரிந்த பூவினாற்செய்த வணையும் மெல்லிதாகிய பன்னீரும் புழுகுசவ்வாதும் வேனிலாகிய இரண்டுகாலத்திலும் முதிராவேனிலாகிய இளவேனிற்காலமுமாகிய தன்மையாற் றேவர்கள் தொழப்பட்ட பெருமாளானவர் அம்புயமின்னாகிய இலக்குமிகாந்தரானவர் வேதத்துக்கு நாயகனானவர் அழகின்மிக்க நம்பெருமாளானவர் இன்னம் வரக்காண்கிலேன் ஏது செய்வேன். என-று. 84

கூதிர்காலம்-வேற்றொலி வெண்டுறை.

இன்னிசைவேயினர்[illegible]னியகோயிலையெய்தார்போல்
பொன்னினைவாலவர்போனவிடத்தினிற்போகாதோ
மின்னியமுகிற்றுளியென்றென்மேலெலாம்
வன்னியின்பொறிகளைவழங்குவாடையே.

இ-ள். இனிய இசையைப்பொருந்திய வேய்ங்குழலையுடையவர் நிலைபெற்ற திருவரங்கத்தில் இனிதுமேற்பட வராதவர்போன்றும் பொருள்தேடும் நினைவினாற் றலைவரானவர் போனவிடத்திலே போகமாட்டாத மின்னப்பட்ட மேகமேமழையும் ஒன்று மென்மெய்முழுதும் நெருப்பின்பொறிகளை வழங்கப்பட்ட வாடையான 'விக் காற்று. என-று. 85

கார்காலம்-அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வாடையாயிருபனியுமாய்வேனிலாய்வந்ததுகாரென்றே
பேடைமாமயிற் சாயலாயன்பர்மேற் பிழைகருதிடல்செம்
[பொன்
ஆடைநாயகன்றிருமகணாயகனரங்கநாயகனேறும்
ஓடைமாவிதுமதமிதுபிளிறியவொலியிதுமழையன்றே.

இ-ள். கூதிர்காலமும் - முன்பனிக்காலமும் - இளவேனிற்காலமும் - முதுவேனிற்காலமுமாகிய ஐந்துப்பருவமும்போய் இக்கார்காலமாகிய பருவம்வந்துநேர்ந்ததென்று சாயலினாலே பெண்மயிலையொப்பாய் தலைவர்மீது பிழைநினையக் கடவதென்று பொன்னின் பீதாம்பரத்தைத்தரித்த நாயகன்றிருமகளாகிய சீதேவி நாயகன் அரங்கமாகிய கோயிலுக்கு நாயகன் அவனேறப்பட்ட பொற்பட்டங்கட்டிய நெற்றியினுடைய யானை இது மேகமன்று. மதசலமிது மழைநீரன்று. பிளிறிடப்பட்டவோசை இது இடியோசையன்று. ஆகையால் மழையன்று என்று மறுத்தது. எ-று. 86

கட்டளைக்கலித்துறை.

மழைபோன்மரகதம்போலெம்பிரான்வளர்
கோயிலன்னீர்
பிழைபோமிவர்க்கிதையாருரைப்பாரிவர்
பின்வந்தெய்த
தழைபோயுரைத்தவருத்தம்பொருமைகொல்
சங்கரன்பால்
உழைபோயொதுங்கமுயல்போய்மதிபுக்
கொளித்ததுவே.

இ-ள். இருண்ட மழைமேகம்போலவும் மரகத மாணிக்கமலைபோலவும் எனக்குப் பிராணனவர் கண்வளருந் திருவரங்கத்தையொப்பீர்கள் குற்றந்தீர்த்த உரைக்குரையாருரைக்கத்தக்கவர் யாவரொருவரு முரைக்கத்தக்கவரன்று. ஆதலாலிவர் பின்னுகவந்து துடர்ந்தெய்த மாந்தழையானது சென்றுபட்டுரைத்த வருத்தம் பொருமையினாலன்றோ மானானது ஈசுரன்கையிற்போயொளிக்கவும் முயலானது சந்திரனிடத்திற் போயொளிக்கவுமான காரணமென்று தலைவன் தலைவியானவள் சகியாடித்தனது தோழியருக்குரைத்தது. எ-று. 87

கார்காலம்-எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஒளிக்குமிருசுடர்க்கவ்ளம்விழுங்கும்பேழ்வா
யுருமுழக்கத்திந்திரவிலோடைநெற்றித்
துளிக்குமழைமதக்கொண்மூக்களிற்றைமின்னற்
ரோட்டிமாருதப்பாகர்துரக்குங்காலம்
அளிக்குலமுங்களிக்குமயிற்குலமும்பாடி
யாடுபொழிற்றிருவரங்கரணையாக்காலம்
விளிக்குமலைக்கருங்கடலுமொறுக்குங்காலம்
வினையேற்கு விழிகடுயின்மேவாக்காலம்.

இ-ள். தன்னுள் ஒளிக்குதலையுடைய சந்திராதித்த ரென்னு மிரண்டு கவளத்தையும் விழுங்கி அகன்ற வாயி னிடத்துள்ள இடியே பிளிறப்பட்ட முழக்கமாய், இந்திர தனுசே நெற்றிப்பட்டமாய்ப், பெய்யப்பட்ட மழையே மதசலமாய், வரப்பட்ட மேகமென்னும் யானையை மின் னலாகிய அங்குசத்தினாலே காற்றென்னும் யானைப்பா கர் துறந்துகொண்டுசெல்லுங்காலம். வண்டினங்கள் பா டவும் அதுகண்டு களிப்பினையுடைய மயில்களாடவும் ஆகிய பொழில்சூழ்ந்த திருவரங்கரானவ ரணையாதகா லம். சத்திக்குமலையினையுடைய கருங்கடலு மொருக்கப் பட்டகாலம். மிகுந்த வினையைச்செய்த எனக்கு விழிக ளானது துயில்பொருந்தாக்காலம். எ-று. (இதன்கரு த்து. இத்தன்மையாகிய கார்காலம் அரங்கநாயகரணை வாராகில் கடலுமொருக்க வேண்டுவதில்லை கண்ணுமுற ங்காமை வேண்டுவதில்லை யென்றறிக.) 88

இளவேனிற்காலம்-கலிநிலைத்துறை.

மேவலர்வாழ்தென்னிலங்கைமலங்கவொருகாலிருகால்
விற்குனித்தெய்
ஏவலர்வாழ்திருவரங்கத்தெமையிருத்திப்போனவர்நாட்
டில்லைபோலும்
கோவலர்வாய்க்குழலோசைக்கானிரைகள்செவியேற்குங்
குறும்புன்மாலைப்
பூவலரின்மணம்பரப்பியிளவேனில்வரவந்த
பொதியத்தென்றல்.

இ-ள். மேவலராகிய பகைஞர் வாழப்பட்ட தென் னிலங்கையை மலங்கவொருதர மிருகொடியு மொரு

கொடியாய் வளைய வில்லைவளைத்தெய்யு மம்பினில் வல்லவராகிய இடையருடைய வாயினூதும் வேய்ங்குழலோசையைப் பசுவினிரைகள் செவியிலுறவொக்குங் கொஞ்சத்தன்மை பொருந்திய புன்மையாகிய மாலைப்போதிற் புட்பிக்கப்பட்ட பூவின் மணங்களைப் பரப்பிக்கொண்டு இளவேனிற்காலம் வருமளவில் வரவந்த பொதியமலைத் தென்றலாவது. எ-று. 89

இரங்கல்-கட்டளைக்கலித்துறை.

தென்றலைக்குங்குமச்சேற்றைப்பொருள்சிறியாள்பெரிய
துன்றலைக்குந் துடிக்கும்மென்செய்வாடியராலழைத்த
வன்றலைக்குஞ்சரங்காத்தாயிலங்கைமலங்கவளைத்
தன்றலைக்குஞ்சரத்தாயரங்காவண்டராதிபனே.

இ-ள். தென்றலாகிய காற்றையுங் குங்குமமாகிய சேற்றையும் பொறுக்கமாட்டாள் மிகவுஞ் சிறிய தன்மையையுடையாளாகையாற் பெரிதாகிய நெருங்கிய அலைகடலினது ஓசைக்கு மனது துடிப்பள் என்செய்தாற்றுவள் துன்பத்தினாலே மெய்யென்று ஓலமிட்டழைத்த வன்மைபெற்ற தலையினையுடைய யானையை இரட்சித்தவரே இலங்கையானது கலங்கவளைந்து அப்போதலைத்த பாணத்தையுடையவனே அரங்கமாகிய நகரையுடையவனே தேவதேவாதிபனே தேவரீர் சித்தமிரங்கவேண்டும். எ-று. 90

கட்டளைக்கலிப்பா.

அண்டர்போற்றுந்திருவரங்கேசனார்
அணியரங்கத்திருமுற்றமெய்தினால்
பண்டுபோனவளையாழிவாங்குவேன்
பாலியாதுபராமுகம்பண்ணினால்
தண்டும்வாளுஞ்சிலையுமிருக்கவே
சங்குமாழியுந்தாருமென்பேனவை
தொண்டருக்கொற்றிவைத்தோமென்றேதினுற்
றுளவமாலையைத்தொட்டுப்பறிப்பனே.

இ-ள். தேவர்கள் போற்றிசெய்யுந் திருவரங்கேசராகிய நம்மணியரானவர் அழகினையுடைய முற்றத்தினிடத்தி லெழுந்தருளப் பெற்றேனாகில் என்கையைவிட்டு முன்னே கழன்றுபோன வளையலையும் ஆழியாகிய மோதிரத்தையுந் தாருமென்று வாங்கிக்கொள்ளுவேன்.

அதற்குக் கிருபைபண்ணாமற் பராமுகம் பண்ணினால் அதற்குப்பதிலாய்த் தண்டும் வாளும் வில்லு மிருக்கட்டுஞ் சங்காழியாகிய சங்குசக்கரத்தையுந் தாருமென்பேன். அதை அடியார்களுக்கு ஒற்றிவைத்தோமென்றுரைத்தால் துளவமாலையைத் தொட்டுபறித்துக்கொள்ளுவேன். எ-று. 91

கலிநிலைத்துறை.

தொட்டுண்ட தயிர்வெண்ணெய்க்கன் றாய்ச்சியுரலோ [டு
சூழ்ந்துகட்டக்
கட்டுண்டுகழலவிரகறியாமலிருந்தழுத
கள்வன்யாரே
கட்டுண்டானரங்கனெனக்கட்டுரைப்பாராகிலுங்
கங்கைசூடி
மட்டுண்டகொன்றையான்மலர்மேலானறிவரிய
வடிவனன்றே.

இ-ள். அள்ளியுண்ட வெண்ணெய்க்காக அப்போது ஆய்ச்சியாகிய அசோதை உரலுடன் வரிந்துகட்ட கட்டுப்பட்டுக் கழலும்படி வகையறியாமலிருந்தழுதகள்வரைக் கட்டுப்பட்டான் அரங்கனென்று கட்டுவார்த்தையாகச் சொல்லுவாராகிலுங் களிப்பினையுடைய வண்டுசாதிகள் சத்திக்கப்பட்ட தேனிரம்பிய கொன்றைமாலையைத்தரித்த சிவனும் உந்திக்கமலத்தின்மேலுறைந்த வயனும் அறிதற்கரிய வடிவத்தையுடையவனும். எ-று. 92

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வடியாதபவக்கடலும்வடிந்துமூல
மாயைகடந்தப்பாற்போய்வைகுந்தஞ்சேர்ந்
தடியார்கள்குழாங்கூடியுனதடிக்கீழ்
அடிமைசெய்யுமக்காலமெக்காலந்தான்
கொடியாடுமணிமாடவயோத்திமூதூர்
குடிதுறந்துதிருவரங்கங்கோயில்கொண்ட
நெடியோனேயடியேனுன்முயற்சியின்றி
நின்னருளேபார்த்திருப்பனீசனேனே.

இ-ள். துவசங்களாடப்பட்ட நவரத்தின மணிகளாலிழைத்த மாடமாளிகை கூடகோபுரம் நிறைந்த அயோத்தியா புரியைவிட்டுக் குடிவாங்கித் திருவரங்கமாகிய கோயிலினிடத்திலே குடிகொண்டருளிய நெடி

தானவனே! அடியேனுலாகவேண்டிய முயற்சியில்லாமல் உனது திருவருள் தானே பாருமென்று பார்த்திருந்த கடையேனொருக்காலும் வடிவதற்கரிய பிறவிக்கடலைக் கடந்துபோய் மூலப்பிரகிருதியையுங் கடந்து அதற்கப்பாலாகிய வைகுந்தத்திற் சேர்ந்து உனதடியார் கூட்டத்துடனே கூடி உனது திருவடியின்கீழ் அடிமை செய்யத்தக்க அக்காலமானது எக்காலங் கிடைக்குமோ அறிந்திலேன். எ-று. 93

கட்டளைக்கலித்துறை.

நீசச்சமணர்க்குஞ்சூனியவாதர்க்குநீதியற்ற [றேன்
பூசற்பௌத்தர்க்குஞ்சைவர்க்கும் யார்க்கும் புகலுகின்
நாசப்படாவுயிரெல்லாமுதற்றந்தநாதன்கண்டீர்
ஆசற்றசீரரங்கத்தாதிமூலத்தரும்பொருளே.

இ-ள். நீசத்துவமான சமணர்க்கும், மாயாவாதியர்க்கும், நீதியையற்ற பூசலாகிய போரையுடைய பௌத்தருக்கும், மற்றுமுள்ள எல்லாச் சமயவாதிபருக்கும் எடுத்துரைக்கின்றேன் குற்றமற்ற சீரங்கத்திற் சிறந்த அனாதியாகிய ஆதிமூலத் தரும்பொருளானவனே அழிவில்லாத சகலசீவகோடிகளையு முன்னமே யுண்டாக்கிய நாதன்கண்டீர். எ-று. 94

நேரிசை வெண்பா.

அரும்புண்டரீகத்தடியிணைக்கென்னெஞ்சம்
இரும்புண்ட நீராவதென்றோ-விரும்பி
அறந்திருந்துங்கோயிலரங்காவுனை நான்
மறந்திருந்துமேற்பிறவாமல்.

இ-ள். அரிதாகிய தாமரையையொத்த உனது திருவடிகளில் விருப்பமாய் என்னிதயமானது இரும்புண்ட நீருக்கொப்பாய் ஈண்டு வாராததென்றைக்கோ புண்ணியமானது திருந்தத்தக்க கோயிலையுடைய அரங்கனே உன்னை மறந்திருந்து இனிமேற்படப் பிறவாமைக்கு. எ-று.()

கலிவிருத்தம்

பிறவியெனுங்கடலழுத்திப்பிணிபசியோடிந்திரியச்
சுறவனுங்கக்கொடுவினையின்சுழலகப்பட்டுழல்வேனை
அறமுடையாயென்னப்பாவரங்காவென்னுருபிருக்
குறவுடையாயடியேனையுயக்கொள்வதொருநாளே.

இ-ள். பிறவியென்னப்பட்ட சமுத்திரத்திலேயழுந்திப் பிணிப்பசியுடனே இந்திரியமாகிய சுருமீனுனது

விழுங்கக் கொடியவினையாகிய சுழியிலகப்பட்டுச் சுழலக் கடவேனோ! தருமசுரூபமானவனே! எனக்கு அப்பனானவனே! என்னுடைய நிறைந்தவுயிருக் குறவானவனே! அடியேனையும் ஒருபொருளா யுய்யக்கொண்டருள்வதுக் கொருநாளுமுண்டாகுமோ! எ-று. 96

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஒருபொருளல்லேனிருவினையுடையேன்
உனதுதொண்டெனுந்துறைகுளித்துன்
பெருகுதண்ணளியின்பாசந்தொட்டிழிந்து
பெரியதோர்முத்தியான்பெற்றேன்
திருவுமாமணியுஞ்சங்கமுமேந்திச்
செய்யதாமரைபலபூத்துக்
கருநிறமுடைத்தாய்நதிபொருதரங்கங்
கலந்ததோர்கருணைவாரிதியே.

இ-ள். அடியேன்வந் தொருதன்மையான பொருளானவனன்று. இறக்கிறதும் பிறக்கிறதுமாகிய இரண்டு வினையையுடையேனாதலால் உனதடிமைத் திறமாகிய துறையினிடத்திற் சென்று குளித்துப் பெருக்கப்பட்ட உனதருளாகிய கயிற்றைப் பற்றியிழிந்து பெரிதாயொப்பற்ற சங்காழியென்னு மடையாள முத்திரையைப் பெற்றேன். ஸ்ரீதேவியும் பெருமைமிக்க கவுத்துவமணியுஞ் சங்கமும் விளங்கிய அவயவமாகிய பலபல சிவந்த தாமரைகளும் பூத்து கரிய வண்ணத்தைப்பொருந்திக் காவேரியாகிய ஆற்றினலை பொருதப்பட்ட வரங்கத்தினிடத்திற் கலந்தருளிய ஒப்பற்ற ஒரு தனிமுதலாகிய கருணைக்கடலானவனே. எ-று. (பின்னுமிதற்கேயுரை: திருவாகிய லட்சுமியும் பெருமைமிக்க மணியுஞ் சங்குந் தோன்றிச் சிவந்த தாமரைகள் பலவும் பூத்துக் கருநிறம் பெற்று நதியிற் புறப்பட்ட அலையோடுங்கலந்த கருணையுடையகடலே அடியேனொருபொருளையுடையவனன்று. மிகவுமேழையேன் ஆதலால் உனதுதொண்டனெனும் பெயரையுடைய துறையிற்குளித்து அங்ஙன மாளாமற் பெருகிய விரகத்தைச்செய்யு மாதரவாகிய தண்ணளியின் கயிற்றைப் பிடித்து மூழ்கில் பெரிதாகிய ஒப்பற்ற முத்தென்னும் புரோசனத்தை யடைந்தேனென்று கடலுக்கும் அரங்கர்க்குஞ் சிலேடைசொல்லியவா றறிந்துகொள்க.)

கட்டளைக்கலித்துறை.

வாரியரங்கம்வருதிருப்பாவைக்குமண்மகட்குஞ்
சீரியரங்கண்வளர் திருக்கோலமுந்தென் றிருக்கா
வேரியரங்கவிமானமுங்கோயிலும்மேவித்தொழார்
பூரியரங்கவர்கண்ணிரண்டாவன புண்ணிரண்டே.

இ-ள். திருப்பாற்கடலில் அவதாரஞ்செய்த திருவாகிய சித்திரப்பாவைபோன்ற ஸ்ரீதேவிக்கும் பூதேவிக்கும் மணாளராகிய சிறப்பினையுடையவர் திருக்கண்வளர்ந்தருளிய சிங்காரமும் தெற்குத்திசைக்குத் திருப்பதியாகிய திருக்காவேரிசூழ்ந்த திருவரங்கேசருடைய கனவிமானத்தினையுந் திருக்கோயிலையு மேவித் தொழாதவர் எவர்களோ அவர்கள் முகத்திலிரண்டு கண்களென்றுண்டாகிய விரண்டும் இரண்டு புண்களென்றுண்டானது. எ-று.

நேரிசைவெண்பா.

புண்ணுருடற்பிறவிபோதுமெனக்குமுனக்கும்
எண்ணுதிருந்ததினிப்போதும்-கண்ணு
குழற்காளாய்தென்னரங்கக்கோயிலாய் நின்பொற்
கழற்காளாய் நின்றேனைக்கா.

இ-ள். துற்கந்தமாகிய புண்ணினால் நிறைந்த தேகத்தையுடைய ஜெனனமானது இனி அடியேனுக்குப் போதுந் தேவரீருக்கும் இவனிப்படி ஜெனனமரணத்திற் குயவன் றிகிரியைப்போலத் திரியலாமோவென்று சற்றுமிருதயத்திலெண்ணியிரங்காமலிருந்தது இனிப்போதுங் கண்ணனே! வேணுநாதப்பிரியனாகிய விடலையே! தெற்குத்திசைக்குத் திருப்பதியாகிய திருவரங்கமென்னுங்கோயிலையுடையவனே! தேவரீருடைய அழகியதிருவடிக்காளாக இப்போது அடியேனைக் காக்கவேண்டும். எ-று. ()

கலிநிலைத்துறை.

காவிரிவாய்ப்பாம்பணைமேற்கருமுகில்போற்கண்வளருங்
கருணைவள்ளல்
பூவிரியுந்துழாயரங்கர்பொன்னடியேதஞ்சமெனப்
பொருந்திவாழ்வார்
யாவரினுமிழிகுலத்தோராயினுமவர்கண்டீ
ரிமையாநாட்டத்
தேவரினுமுனிவரினுஞ்சிவனயனென் றிருவரினுஞ்
சீரியோரே.

இ-ள். காவேரியென்னும் ஆற்றினிடத்திலே பாம்பணையாகிய சேஷசயனத்தின்மீது திருக்கண்வளர்ந்தருளிய கருணாநிதியாகிய வள்ளலான அரங்கநாயகருடைய பூமலர்ந்த பூந்துழாய் மாலைபொருந்திய பொன்னையொத்த திருவடியே தஞ்சமென்றடைந்து வாழப்பட்டவர் எக்குலத்துள்ளாரிலும் இழிகுலத்தோராயினும் அவர்களை கண்டீர் இமையாநாட்டத்தினையுடைய தேவர்களிலேயுஞ் சிவனயனென்றுரைக்கப்பட்ட விருவரிலேயுஞ் சிறப்பினையுடையவர். எ-று. 100

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவண்ணவிருத்தம்.

மழைமுகிலெனவேபணாமுகந்திகழ்
வரியரவணையேறிவாழரங்கர்தம்
எழில்பெறுமிருதாளிலேகலம்பக
மெனுமொருதமிழ்மாலைதானணிந்தனன்
குழலிசையளிமேவுகூரம்வந்தருள்
குருபரனிருபாதபோதடைந்தவன்
அழகியமணவாளதாசனென்பவ
னடியவரடிசூடிவாழுமன்பனே.

இ-ள். மழை மேகம்போன்ற வண்ணராய்ப் பணாடவியையுடைய வரிபொருந்திய பாம்பணையேலேறி இனிதாயமர்ந்து வாழும் அரங்கநாயகருடைய எழில்பெற்ற இரு பாதாம்புயங்களிற் கலம்பகமென்னும் பாமாலை சாற்றியருளினன் குழலிசையும் வண்டிசையும் மேவும் வளஞ்செறிந்த கூரமாகிய நகரிலுள்ள குருபரனுடைய திருவடிகளையடைந்த அழகிய மணவாளதாசனென்றும் பேர்பெற்ற அடியவருக் கடியவருடைய திருவடிச் சூடி வாழும் அன்பனைவன். எ-று.

திருவரங்கக்கலம்பகம் மூலமும் உரையும் முற்றிற்று.

## தனிச்செய்யுள்.

கட்டளைக்கலித்துறை.

* தரங்கத்தினின்றுதளருமென்னுவிக்குன்றுமரைத்தா
ளிரங்கித்தருவதெக்காலஞ்சொல்லாவெழுபாருமுண்டு
பரங்கெட்டோராலினும்பாலாழியினும்பசும்பொன்னிரு
ழரங்கத்தினுந்துயில்வாயச்சுதானந்தகோவிந்தனே.

இ-ள். தரங்கமாகிய அலைபோலலைந்து தளர்ச்சியை யடையும் அடியேனுடைய ஆவிக்காதாரமாக உனது பாதாரவிந்தத்தை இரங்கித் தருவதெக்காலமோ சொல்வாயாக. எழுலகமுண்டு அதின்கணுந் தோன்றாமல் ஓராலிலைமேற் பாற்கடலிற்றுயிலும் பசுமைபொருந்திய காவேரிசூழ்ந்த திருவரங்கத்தினிடத்திலுந் துயின்றருளிய அச்சுதானந்த கோவிந்தனென அரங்கநாயகனே. எ-று. (பரங்கெட்டென்பதற்கு சகலபுவன சராசரங்களுந் தனது குக்ஷிக்குளடங்கித் தானே பரமாயிருந்தானென்றுரைப்பினும் அமையுமென்க.)

---

* ஐம்பது ஆண்டுகட்கு முன்னும் அதற்குப் பின்னும் அச்சிட்டுள்ள சிலபிரதிகளில் இச்செய்யுளை 101-வது செய்யுளாக சேர்க்கப்பட்டிருக்கின்றது. இப்போதுள்ள திருத்தமான பலபிரதிகளில் இச்செய்யுள் காணப்படவில்லை.

ஸ்ரீ

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

# அறிவிப்பு.

இப்புத்தகமும், இன்னும்பலவித கதை, அம்மானை, நாடகம், விலாசம், கீர்த்தனை, உரை, வைத்தியம், ஜோசியம், புராணம், டிராமா தினுசுகள், நாவல்ஸ்கள், ஸ்கூல் பிள்ளைகளுக்கு வேண்டிய ஸ்கூல் புத்தகங்கள், இசுலாமானவர்கட்கு வேண்டிய தமிழ் அச்சிற் பதிப்பித்த அனேக புத்தகங்கள், வேதாந்த சித்தாந்த புத்தகங்கள், வைஷ்ணவ சாம்பிரதாய கிரந்தங்கள் முதலியன எங்களிடம் கிடைக்குமாதலால் தேவையான வியாபாரிகளும், மற்றவர்களும் அடியிற்கண்ட எங்கட்கு எழுதி வி. பி. பி. முலமாய் பெற்றுக்கொள்ளவேண்டுகிறோம்.

இப்படிக்கு,

பு. நாராயணசாமிப்பிள்ளை அன்டு பிரதர்.

நற்றமிழ்விலாச அச்சியந்திரசாலை,

37, சரவணப்பெருமாள்முதலி வீதி, வேப்பேரி போஸ்ட், சென்னை.

